# மணிமேகலை சரிதை

[படங்களோடு கூடியது]





சென்னை

இந்தியன் பப்ளிஷிங் ஹவுஸ் லிமிடெட்

தமிழ்க் காவிய வரிசை நே-2.

# மணிமேகலை சரிதை

[படங்களோடு கூடியது]

இது
சென்னைப் பச்சையப்பன் கலாசாலைத்
தமிழ்ப்பண்டிதர்
ஆ. வீ. கன்னைய நாயுடு அவர்களால்
இயற்றப் பெற்றது.




சென்னை
இந்தியன் பப்ளிஷிங் ஹவுஸ் லிமிடெட்
விலை அணா 9]   1922   [காபிரைட்

IV Form A.

# அட்டவணை

அத்தியாயம் | பக்கம்

---

ஸ்ரீ

# மணிமேகலை சரிதை

## 1. திருவிழாச் சிறப்பு

" நிலமகள் முகமோ! திலகமோ! கண்ணோ!
நிறைநெடு மங்கல நாணோ!
இலகுபூண் மார்பின் ஆரமோ! உயிரின்
இருக்கையோ! திருமகட் கினிய
மலர்கொலோ! மாயோன் மார்பின்நன் மணிகள்
வைத்தபொற் பெட்டியோ! வானோர்
உலகின்மேல் உலகோ! ஊழியின் இறுதி
உறையுளோ! யாதென உரைப்பாம்."

எனக் கற்றோர் யாவரும் சிறப்பித்துக் கூறும் பெருமை வாய்ந்தது நம்மிந்திய நாடு. இது வட இந்தியா, தென்னிந்தியாவென இருபிரிவாய்ப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. இமயமலை முதல் விந்தியமலை வரையில் வட இந்தியாவெனவும், விந்தியமலை முதல் கன்னியாகுமரி வரையில் தென்னிந்தியா வெனவும் சொல்லப்படும். தென்னிந்தியாவைப் பலகாலமளவும் தமிழ் வேந்தர் மூவரும் ஆட்சி புரிந்து வந்தனர். அவர்கள் சேர சோழ பாண்டியரெனப் படுவார். அவர்களில் சோழர் தென்னிந்தியாவின் வடகிழக்குப் பகுதியையும், பாண்டியர் தெற்குப் பகுதியையும்

சேரர் மேற்குப் பகுதியையும் ஆண்டு வந்தனர். இம் மூவேந்தர்களின் வழித்தோன்றியவர்களில் பலர் பெரும் புகழ்பெற்று விளங்கினர்.

முன்னொரு காலத்தில் மேற்கூறிய சோழர்களில் ஒருவன் காவிரிப்பூம்பட்டினத்தில் அரசு செலுத்தி வந்தான். அவன் பேர் செம்பியச் சோழன். அவன் காலத்தில் கல்லினும் வலிய நெஞ்சம் படைத்த கொடிய அசுரர்கள் சிலரிருந்தனர். அவர்கள்பால் ஆகாயத்தில் சஞ்சரிக்கத்தக்க மூன்று மதில்களோடுகூடிய மூன்று பட்டணங்களிருந்தன. அவைகளின் உதவியால் அக்கொடியவர் தாம் விரும்பிய விடங்களுக்குச் சென்று, ஆங்காங்குள்ள தேவர்களையும் முனிவர்களையும் சான்றோர்களையுந் துன்புறுத்தி வந்தனர். அப்போதவர்கள் செம்பியனை வணங்கி, "மன்னவரேறே! தீய அரக்கர்கள் எம்மைப் பெரிதும் வருத்துகின்றனர். அவர்களால் யாம் படும்பாடு அளவிடற் கரியதாகும்."

> "இரக்கமென் றொருபொரு ளிலாத நெஞ்சினர்
> அரக்கரென் றுளர்சிலர் அறத்தின் நீங்கினர்
> நெருக்கவும் யாம்படர் நெறிய லாநெறி
> துரக்கவும் அருந்தவத் துறையுள் நீங்கினேம்"

என, ஸ்ரீராமபிரானைக் கண்டு தமது குறையை யுணர்த்திய தண்டகாரணிய வாசிகளைப்போல், முறையிட்டுக் கொண்டனர். அப்போதவன், "நீங்கள் சிறிதும் அஞ்சாதீர்கள். நானிப்போதே அத்தீயவர்களை யழித்துவிடுகிறேன்" என அவர்களைத் தேற்றி உடனே அவ்வரக்கர்மேல் போர் புரியச் சென்றான். பலநாளளவும் அவன் அவர்களுடன் கடும்போர் புரிந்து, அவர்களனைவரையும் வதைத்து அவர்களுக்குப் பாதுகாப்பாயிருந்த அம்மதில்களையும் அழித்

தான். இதனால் அவன் * 'தூங்கெயிலெறிந்த செம்பியன்' எனச் சிறப்புப் பெயர் பெற்றனன்.

பின்பு அச்செம்பியன் ஒருநாள் அகத்தியமுனிவரைக் கண்டு வணங்கினான். அப்போதவர், "வேந்தர் வேந்தே! நான் உனக்கு ஒன்று கூறுகிறேன். அதனைக் கருத்தாய்க் கேட்பாயாக. ஒவ்வொரு வருஷமும் தேவேந்திரனைக் குறித்து நீ உன்நாட்டில் திருவிழாவியற்று. அதனை இருபத்தெட்டு நாளளவும் மிக்க பக்தியோடும் அன்போடும் செய்துவா. அதனால் நீ பற்பல நன்மைகளை யெய்துவாய்" என்றார். அதன்படி, அச்சோழன் தேவேந்திரனைக் கண்டு தொழுது அகஸ்தியமுனிவர் தனக்குச் சொன்ன விஷயத்தைத் தெரிவித்து, "நான் உன்பொருட்டுச் செய்யும் திருவிழாவை நீ விருப்பத்தோடு ஏற்றுக் கொள்ள வேண்டும்" என்று வணங்கிக் கேட்டுக் கொண்டான். அவனவ்வாறே உடன்பட்டான். அது முதல் அவன் அத்திருவிழாவை மிக்க சிறப்புடன் செய்து வந்தான். அதனால் அவன் நாட்டில் பசி, பிணி, பகை முதலியன ஒழிந்தன. அந்நாட்டிலுள்ள குடிகள் பலவித நன்மைகளைப் பெற்று இன்பமெய்தினர்.

செம்பியனைப் போலவே, அவன் மரபில் தோன்றிய மன்னவரும் அத்திருவிழாவை மிக்க சிறப்புடன் செய்து வருவாராயினர். அவ்விழாவின் பயனை அந்நாட்டிலுள்ள குடிகள் நன்கறிந்தவராதலின், அவர்களும் அதில் அதிக அன்பும் ஊக்கமும் செலுத்தி வந்தனர். வழக்கம் போல அத்திருவிழாவைக் கொண்டாடுங் காலம் குறுகினது. அப்போது அங்குச் செங்கோல் செலுத்தி

---

* (ஆகாயத்தில்) சஞ்சரிக்கும் மதில்களை யழித்த செம்பியன் என்பது.

வந்த சோழமன்னவன் ஆணையின்படி, அந்நகர மாந்தர்கள் பலர் ஒன்றுகூடி, "இந்திர விழாவை நாம் மறக்கலாகாது. அதனைக் கைவிடின் நமக்குப் பலவித தீங்குகள் நேரும். ஆதலால், நாம் அதனை நடத்துவோமாக" எனத் தமக்குள் முடிவுசெய்து, அதனை அந்நகர வாசிகளனைவருக்குந் தெரிவிக்கும்படி முரசறைவோனுக்குக் கட்டளையிட்டனர். உடனே அவன் யானையின் மேலேறி, 'திருவிழா தொடங்கும் நாள், அது முடியும் நாள், அதனை நடத்தும் முறை' முதலியவற்றை முரசின் மூலமாய் அனைவர்க்கும் விளக்கமாய் அறிவித்தனன்.

இதைக் கேட்டதும் அவ்வூரா்ரெல்லாம் அளவற்ற மகிழ்ச்சியடைந்தனர். பின்பு அவர்களில் சிலர் தத்தம் வீடு வாசல்களை மெழுகிக் கோலமிட்டுச் சுத்தம் செய்தனர். வேறு சிலர் தமது வீடுகளைப் பழுது பார்த்து அவைகளுக்கு வெள்ளை பூசினர். மற்றுஞ் சிலர் தத்தம் மாளிகைகளின் மேல் பலவகைத் துகிற்கொடிகளைப் பறக்கவிட்டனர். இன்னுஞ் சிலர் குலைவாழை, குலைக்கமுகு முதலியவற்றைத் தமது வீட்டு வாசல்களில் கட்டினர். பின்னுஞ் சிலர் தத்தம் மாளிகைகளுக்கு எதிரில் பூம்பந்தலிட்டனர். தெருக்கள் தோறும் புது மணல் பரப்பி நீர் தெளித்து மலர் தூவப் பட்டன. பற்பல விடங்களில் பூம்பந்தல்களும் மகர தோரணங்களும் அமைக்கப் பட்டன. ஆலயங்கள் தோறும் கடவுள் வழிபாடு செய்யப் பட்டது. பலவிடங்களில் ராமாயணம், பாரதம் முதலிய உபந்நியாசங்கள் நடைபெறலாயின. பல தெருக்களில் ஆடல், பாடல், மந்திரஜாலம் முதலிய வேடிக்கைகள் நிகழ்ந்தன. ஆடவர் மகளிர், சிறுவர் சிறுமியர் அனைவரும் விலையுயர்ந்த ஆடையணிகளால் தம்மை யலங்கரித்துக் கொண்டனர்.

அந்நகரெங்கும் மங்கல வாத்தியங்கள் முழங்கின. இச் செய்தி வெளி நாடுகளில் பரவினது. உடனே ஆங்காங் குள்ளவர் தத்தம் மனைவி மக்கள், உறவினர், நண்பர் முதலியவர்களுடன் அந்நகரத்தை யடைந்தனர். அந்நகர மெங்கும் ஜனங்கள் திரள்திரளாயிருந்தனர். அவர்களில் சிலர் அங்கு நடக்கும் வேடிக்கைகளைக் கண்டு களித்தனர். சிலர் உபந்நியாசங்களைக் கேட்டு மகிழ்ந்தனர். சிலர் பற்பல கடைகளின் காட்சியைக் கண்டு வியந்து, தமக்கும் தமது, சிறுவர்களுக்கும் வேண்டிய பொருள்களை வாங்கினர்.

---

## 2. சித்திராபதி ஊரார் பழித்தலை மாதவிக் குணர்த்தல்.

முன் சொன்னபடி, அந்நகர மாந்தரனைவரும் இத் திருவிழாவை மிக்க சிறப்பாய்க் கொண்டாட லாயினர். ஆனால் மாதவி யென்னும் விலைமாது மாத்திரம் வெளியே போகாமல் அதிக கவலையுற்றிருந்தாள். அப்போது அவள் தாய் சித்திராபதி யென்பவள் வசந்தமாலை யென்னும் ஒரு தோழியை நோக்கி, "நங்காய்! என்மகள் மாதவி ஆடல் பாடல்களின் பொருட்டு வெளியே வராமையால், இவ்வூரார் அவளைப் பலவாறு பழிக்கின்றனர். இதனை நீயும் அறிவாயல்லவோ? ஆதலால், நீ விரைந்து சென்று அவளையும் அவள் மகள் மணிமேகலையையும் அழைத்துவா" எனச் சொல்லி யனுப்பினள். அவளவ்வாறே யாதவியின் இருப்பிடத்தை யணுகினள். அங்கே மாதவியும் அவள் மகள் மணிமேகலையும் அழகிய மண்டபமொன்றில் உட் கார்ந்து கொண்டு தூய்மையாக மலர் மாலைகள் தொடுத் துக் கொண்டிருந்தனர். அத்தருணம் அங்குச் சென்ற வசந்தமாலை மாதவியை நோக்கி, "பெண்பாவாய்!

இவ்வாறு வருந்துவானேன்? ஐயோ! உன்மேனி பொலிவிழக்கக் காரணமென்ன? உன்னைக் காணுந் தோறும் என் உள்ளங் குழம்புகிறது. இவ்வாறு வெதும்புதல் நம்போன்ற விலைமாதர்க்குச் சற்றுமடாது. ஆடல் பாடல் சங்கீதம் முதலியவற்றில் நின்னை யொப்பவருண்டா? நீ வெளியே வாராமையால், இந்நகரிலுள்ள சான்றோர்களும் நின்னைப் பழிக்கின்றனர். அதனைக் கேட்கப் பொறாமல், உன்னை யழைத்து வரும்படி உன் தாய் என்னை யனுப்பினள். நமது நகரில் இந்திரவிழா தொடங்கி இரண்டு மூன்று நாட்களாயின. நீ இதுவரையில் வாராமையால், உன் தாய் மிகவும் வருந்துகின்றனள். உன் கவலையை யொழித்து உன்மகள் மணிமேகலையுடன் நீ இப்பொழுதே புறப்படு" என்றனள்.

இவற்றை யெல்லாங் கேட்ட மாதவி 'நெருப்பிலிட்ட புழுவைப்போல்' மனம் பதைத்து வசந்தமாலையை நோக்கி "என்னுருயிர்த் தோழியே! என்னால் விரும்பப் பட்ட கோவலன் தன் மனைவியாகிய கண்ணகியின் கால் சிலம்பை விற்கக் கருதி மதுரைக்குச் சென்றனன். அவ்வூரரசன் அவனைக் கள்வனென்றெண்ணி, அநியாயமாய்க் கொலை புரிந்துவிட்டனன். அன்றுமுதல் இன்றுவரை அவன் பிரிவினால் நேர்ந்த துன்பம் என்னை விட்டகலவில்லை. ஐயோ! இனி நான் என்ன செய்வேன்!

"காதல ரிறப்பின் கனையெரி பொத்தி
ஊதுலைக் குருகின் உயிர்த்தகத் தடங்கா(து)
இன்னுயி ரீவர்; ஈயா ராயின்
நன்னீர்ப் பொய்கையின் நளியெரி புகுவார்;
நளியெரி புகாஅ ராயின், அன்பரோ(டு)
உடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடம் படுவர்."

என்றபடி, தலைப் பத்தினிகள் தமது நாயகன் மரித்தமையைக் கேட்ட மாத்திரத்தில் உயிர் துறப்பர். இடைப் பத்தினிகள் உடனே தீப்பாய்வர். கடைப் பத்தினிகள் தமது அன்பரை யடையக் கருதித் தமது உடம்பை வருத்தி விரதங்களை யனுசரிப்பர். இவர்களில் முதலில் மொழிந்த இருவரைப் போல் நடந்து கொள்ள என்னால் முடியாவிடினும், இறுதியில் கூறியுள்ளபடி தவ விரதம் மேற்கொள்ள நான் எனக்குள் தீர்மானித்து விட்டேன். அதன்பொருட்டு இவ்வூரிலுறையும் பௌத்த மத குருவாகிய அறவணவடிகளின் அடியிணைகளை வணங்கி, "சுவாமி! என்னால் விரும்பப் பட்ட கோவலனென்பவன் அநியாயமாய் மதுரையில் கொலையுண்டனன். இனி நான் செய்யத் தக்கது யாது?" எனக் கைக்கூப்பி முகம் வாடி மனமயங்கி நின்றேன். அப்போதவர் என்னைக் குளிர நோக்கி,

> "பிறந்தோ ருறுவது பெருகிய துன்பம்;
> பிறவா ருறுவது பெரும்பே ரின்பம்;
> பற்றின் வருவது முன்னது; பின்ன(து)
> அற்றோ ருறுவ தறிக"

என்று கூறி, சில தருமங்களையும் உபதேசித்தனர். அன்று முதல் நான் துறவியாகித் தவ விரதந் தாங்கி நிற்கிறேன். இனி என் மகளாகிய மணிமேகலையும் என்னைப் போலவே தவ விரதத்தை மேற்கொண்டொழுகுவாள். ஏனைய விலைமாதர் மகளிரைப் போல், அவள் தீத்தொழிலில் செல்லமாட்டாள். ஆதலால் திருவிழாவிற்கு வர எங்களுக்கு விருப்பமில்லை. இச்செய்தியை நீயென் தாய்க்குந் தோழிமார்களுக்கும் அறிவி" என்றனள். இவற்றையெல்லாங் கேட்ட வசந்தமாலை மிக்க வருத்தத்துடன் அங்கு நின்றுமகன்றாள்.

## 3. மணிமேகலை மலர்வனம் புகுதல்.

மாதவியும் வசந்தமாலையும் பேசியவற்றை யெல்லாம், அவர்க ளருகிலிருந்த மணிமேகலை மிகவும் கருத்தாய்க் கேட்டுக்கொண் டிருந்தாள். தன் தந்தை கோவலன் மதுரையில் அநியாயமாய் வெட்டுண்ட செய்தியைக் கேட்டதும், 'வெய்யிலி லிட்ட வெண்ணெயைப் போல்' அவள் மனம் வெதும்பினாள். அவளை யறியாமலே அவள் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாய்ப் பெருகினது. அவள் தொடுத்துக் கொண்டிருந்த மலர் மாலைகள் அவள் கண்ணீரால் நனைந்து போயின.

அப்பொழுது மாதவி, "என் கண்ணே! ஏன் வீணாய் வருந்துகிறாய்? எவ்வெக்காலங்களில் எவ்வெவை நடக்க வேண்டுமோ, அவ்வக்காலங்களில் அவ்வவை நடந்தே தீரும். நம்மாலாவ தொன்றுமில்லை.

> "ஊழிற் பெருவலி யாவுள; மற்றொன்று
> சூழினுந் தான்முந் துறும்"

எனக் கற்று வல்ல புலவர்கள் புகன்றிருக்கின்றனர். இதனை யறியாமல் நாம் வீணாய் வருந்துவதில் பயனில்லை. ஐயோ! நீ இதுகாறும் வருந்தித் தொடுத்த மாலைகள் உன் கண்ணீரால் நனைக்கப்பட்டனவே. அவை கடவுள் வழிபாட்டிற்குப் பயன்படுமா? வேறு மாலைகள் தொடுக்க வேண்டும். ஆதலால், அருகிலுள்ள பூம்பொழிலுக்கு விரைந்துசென்று புதிய மலர்களைப் பறித்துவா" என வியம்பி, அவள் கண்ணீரைத் தன் கையால் துடைத்தனள்.

அப்போது அவர்களுடனிருந்த சுதமதி யென்னும் ஒருதோழி மாதவியை நோக்கி, "பெண்ணருங்கலமே! யாது செய்யத் துணிந்தாய்! இளம்பருவம் வாய்ந்த

மணிமேகலையைத் தனியே யனுப்புதல் தகுமோ? நான் இங்குவந்த காரணம் உனக்குத் தெரியுமா? என் வரலாற்றைக் கருத்தாய்க் கேள். நான் சண்பை நகரத்திலுள்ள ஒருவேதியன் புதல்வி. என் தந்தையின் பெயர் கௌசிகன். நான் ஒருமுறை மலர் கொய்யக் கருதி ஒரு பூஞ்சோலையில் சிறிதும் அஞ்சாமல் தனியாய்ப் புகுந்தேன். அப்போது இதுபோலவே இவ்வூரில் இந்திரவிழா நடந்துகொண்டிருந்தது. அதனைக் கண்டு களிக்க மாருதவேகனென்னும் ஒரு வித்தியாதரன் ஆகாய மார்க்கமாய் வந்துகொண்டிருந்தான்.

அவன் என் பேரழகைக் கண்டு வியந்து, என்னை மேலே தூக்கிக்கொண்டுபோய்த் தன் வசமாக்கிக்கொண்டான். சிலநாள் சென்றபின், அவன் என்னை மீண்டும் இங்கே கொண்டுவந்து விட்டுவிட்டுத் தன்னிருப்பிடம் போய்ச் சேர்ந்தான். அன்று முதல் யான் என் உறவினரை யிழந்து இங்கே தனியாய் வருந்திக் கிடக்கின்றேன். இளம் பெண்கள் தனித்துச் செல்வதால் இத்தகைய இன்னல்கள் விளைகின்றன. ஆதலால், இளம்பருவமும் கட்டழகும் ஒருங்கே குடிகொண்ட நமது மணிமேகலையை நாம் தனியே அனுப்பலாகாது. நறுமலர் கொய்வதற்குச் சம்பாதி வனம், கவேர வனம் முதலிய பல வனங்கள் இருப்பினும் அங்குச் செல்லலாகாது. ஏனெனில், பூதகணங்களும் தேவர்களும் அவற்றைக் காத்து நிற்பார்.

அருளும் அன்பும் ஒன்றாய் வடிவெடுத்தாற் போன்ற புத்த தேவனது நந்தவன மொன்றுண்டு. அதனை உபவனமென்பர். அவ்வனத்தின் நடுவில் ஒரு பளிங்கு மண்டபமிருக்கிறது. அம்மண்டபம் தன்னுள் புகுந்தவருடைய ஓசையை வெளிப்படுத்தாமல், உருவத்தை மாத்திரம்

வெளிப்படுத்தும். அன்றியும் அதன் நடுவில் ஒரு புதிய பீடம் உண்டு. அது மாணிக்கம் போல் பேரொளி வீசி விளங்கும். அப்பதும பீடம் கருணாகரனாய் விளங்கும் புத்த தேவனுடைய பாதபீடமாம். அது சிறந்த தெய்வத் தன்மை வாய்ந்தது. அப்பீடத்தின் மேல் அரும்புகளை யிட்டால் அவையப்பொழுதே மலரும். பல வருஷங்கள் கழியினும் அவை ஒருபோதும் வாடா; அவைகளில் வண்டுகளும் படியா. மாதவியே! அதன் பெருமையை முற்றுஞ் சொல்ல மறந்தேன்; இன்னுங் கேட்பாயாக: ஒருவர் ஒரு கடவுளைத் தம் மனத்தில் துதித்து, அக்கடவுளின் பொருட்டுத் தாம்கொண்டு சென்ற மலர்களை அப்பீடத்தின் மேலிட்டால், அவை உடனே அப்பீடத்தினின்று நீங்கி அக்கடவுளின் திருவடிகளைப் போய்ச் சேரும். ஒரு வித கருத்துமில்லாமலிட்டால், அவை அப்பீடத்தின் மேலேயே நிலைபெற்று நிற்கும். அதனை மயன் என்னுந் தெய்வத் தச்சனியற்றினன். அவ்வனமொழிய, வேறு வனங்களுக்கு உன் மகள் செல்லுதல் தகாது. அவளுக்குத் துணையாக நானும் அவளுடன் செல்வேன்" என வியம்பி, மணிமேகலையைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு மலர் கொய்யப் புறப்பட்டுப் போனாள்.

இந்திர விழாவின் பொருட்டுப் பற்பல விநோதங்கள் வழி முழுதும் நடைபெற்றுக் கொண்டிருந்தன. சில பெண்கள் வேய்ங்குழல், யாழ், மத்தளம் முதலிய இன்னிசைக் கருவிகளுடன் குயிலினு மினிய தமது தீங்குரலை யெடுத்துப் பல வகைப் பாடல்களைப் பாடிக் கொண்டிருந்தனர். சில விலை மாதர்கள் தெய்வ மகளிரும் நாணும்படி தமது ஆடல் பாடல் அபிநயங்களால் காண்போரைக் களிப்பித்தனர். பல கனவான்கள் தத்தம் நிலைமைக்கேற்றபடி யானை

மேலும் குதிரைமேலும் பற்பல வண்டிகளிலும் ஏறிச் சென்றுகொண்டிருந்தனர். வழி முழுதும் போடப்பட்ட பூம்பந்தல்களும் மகர தோரணங்களும் மிக்க அழகாய் விளங்கின. ஆங்காங்கே ஜனங்கள் திரள் திரளாய்க் கூடி யிருந்தனர். அக்கூட்டத்தினிடையில் ஒரு கட்குடியன், புத்த மதம் மேற்கொண்டொழுகும் பெரியவரொருவரைக் கண்டு, "ஐயனே! இது தென்னம் பாளையிலிருந்து இறக்கப் பட்ட இனியகள்ளாம். இதில் ஒரு சிறிதும் கொலைக் குற்ற மில்லை. இதனைச் சிறிது பருகிச் செல்லுங்கள்" என அவரை வற்புறுத்திப் பரிகாசஞ் செய்தான். பலர் அவன் பின் நின்று அதனை வியந்து நோக்கினர். வேற்றூரி லிருந்து வந்தவர்களில் பலர், அந்நகரத்திலுள்ள மாளிகை களினழகையும், அவற்றிலெழுதப்பட்ட சித்திரங்களி னியல்பையுங் கண்டு தம்முள் அதிசயித்து நின்றனர்.

சுதமதியும், மணிமேகலையும் இவற்றை யெல்லாம் கண்ணுற்றுக் கொண்டே சென்றனர். அப்போதவர்களில் சிலர் மணிமேகலையைக் கண்டு, "ஐயோ! ஈதென்ன விந்தை! இப்பெண்மணி இவ்விளம் பருவத்திலேயே தவ வேடந் தாங்கி நிற்கின்றனளே! ஆகா!! இவள் பேரழ கிருந்தபடி தானென்ன! இவள் மொழிகண்டோ! இவள் விழி வண்டோ! இவ்வளவு கட்டழகும் இளமையும் வாய்ந்த இக்காரிகையைத் தவத்திற் செலுத்திய இவள் தாய் மிகவும் கொடியவளன்றோ!" எனப் பலவாறு கூறி வருந்தினர். பின்பு அவர்களிருவரும் சிறிது தூரம் சென்றதும் உபவனம் தோன்றிற்று. அதனைச் சுதமதி மணிமேகலைக்குக் காட்டினள்.

---

## 4. மணிமேகலை பளிங்கறை புகுதல்

அதன்பின்பு அவர்களிருவரும் அந்த உபவனத்தில் நுழைந்தனர். அங்கே மா, கொய்யா, மாதுளை, புன்னை, கமுகு, வாழை முதலிய பலவகைத் தருக்களும், மல்லிகை, முல்லை, ரோஜா, சாமந்தி முதலிய பலவகைப் பூச்செடிகளும் நிறைந்திருந்தன. தென்றற் காற்று வீசிக்கொண்டிருந்தமையால், அப்பூஞ்சோலை முழுவதும் நறுமணம் நிரம்பியிருந்தது. அச்சோலையிலுள்ள மரங்களின்மேல், சில மந்திகள் தமது குட்டிகளை வயிற்றிலணைத்துக் கொண்டு, அங்குள்ள பழங்களைப் பறித்துத் தின்று கொண்டிருந்தன. கிள்ளை, காகம், நாகணவாய், முதலிய பறவைகள் ஆரவாரஞ் செய்து கொண்டிருந்தன. பளிங்கு போல் தெளிந்த நீரையுடைய ஒரு பொய்கை அச்சோலையின் நடுவில் காணப் பட்டது. ஆகா! அப்பொய்கையின் தன்மையை என்னவென்றியம்பலாம்.

"ஆழம்புண ரியினும்பெரி ததினும்பெரி தகலம்;
சூழெங்கணும் வண்தாமரை; துறையெங்கணும் நீலம்;
கீழெங்கணும் நெடுவாளை வரால்பைங்கயல் கெண்டை;
வாழுங்கரை யருகெங்கணும் வளர்கின்னர மிதுனம்.

ஒருபால்வளர் போதாங்கரை; கருநாரைக ளொருபால்;
ஒருபாலுள மகிழ்நேமிகள்; அன்றிற்குல மொருபால்;
ஒருபால்மட அன்னம்; புனல் அரமங்கைய ரொருபால்;
ஒருபாலிரு பாலுந்தவழ் ஒளிநக்துறை புளினம்."

என்றபடி, அதில் தாமரை, நீலம், அல்லி முதலிய மலர்களும், வரால் கெண்டை, வாளை முதலிய மீன்களும், நாரை, கொக்கு, அன்னம் முதலிய பறவைகளும் செறிந்திருந்தன. இம்மட்டோ! அத்தாமரை மலர்களின் மேல் அன்னப் பறவைகள் சக்கரவர்த்திகளைப் போல் மிக்க

கம்பீரமாய் வீற்றிருந்தன. அத்தடாகத்தின் கரைகளில் மயில்கள் நாடகக் கணிகையரைப் போல் தமது அழகிய கலாபத்தை விரித்து ஆடிக்கொண்டிருந்தன. அவை ஆடுவதற்கேற்ப, மத்தளமடிப்பது போல் சம்பங் கோழிகள் கூவின. பங்கயம், ஆம்பல் முதலிய மலர்களிலுள்ள தேனையுண்டு வண்டுகள் மிக்க இனிமையாய்ப் பண்களைப் பாடின. இவற்றையெல்லாம் சுதமதி மணிமேகலைக்குக் காட்டிக்கொண்டே சென்றனள். இவ்வரிய காட்சிகளைக் காணுந்தோறும் மணிமேகலையின் துயரம் ஒருவாறு தணிந்தது.

இஃதிவ்வாறாக, காவிரிப்பூம்பட்டினத்தை அப்போது ஆட்சி புரிந்துவந்த நடுமுடிக்கிள்ளியின் மைந்தனாகிய உதயகுமரன் என்பவன் மணிமேகலையின் கட்டழகைக் கண்டு விழைந்து அவளை யெவ்வாறாயினும் கைப்பற்றக் கருதியிருந்தான். அத்தருணம் அவன் தேரேறித் தன் பரிவாரத்துடன் போய்க்கொண்டிருந்தான். அப்போது காலவேகமென்னும் அவன் பட்டத்துயானை மதவெறிகொண்டு கட்டுத்தூணை முறித்துப் பாசத்தையும் அறுத்தெறிந்து தெருக்கள்தோறும் ஓடத் தொடங்கிற்று. அதைக் கண்ட ஆடவர் மகளிர் அனைவரும் நடுநடுங்கிக் கதறியோடினர். பாகர்கள் பலர் ஒன்று சேர்ந்து அதைப் பிணிக்க முயன்றும் பயன்படவில்லை. இடிமுழக்கம் போல், அது பிளிறும் பேரொலியைக் கேட்டு அவர்களும் வெருவலாயினர். இச்செய்தி உதயகுமாரன்னவனுக்குத் தெரிந்தது. உடனே அவன் அங்கு விரைந்தோடி அந்த யானையை யணுகி அதன் மதத்தை யடக்கி, அதனைச் சங்கிலியால் பிணித்துப் பாகர்களிடமொப்புவித்து அங்கு நின்று மீண்டான்.

அவன் சிறிது தூரம் சென்றதும் ஒரு மாளிகையில் மிகவும் இனிமையாய் ஒருவன் வீணை வாசித்துக்கொண்

டிருந்ததைக்கேட்டான். அவ்வளவு நன்றாய் அதனை வாசிப்பவன் யாவனென்றறிய விரும்பி, அம்மாளிகையின் சாளரத்தின் வழியாய் உள்ளிருந்தவனை யெட்டிப் பார்த்தான். அத்தருணம் அவன் வாசித்தது மிகவுங் கொடுமையாயிருந்தது. உடனே அம்மன்னவன் உள்ளிருப்பவனைக் கண்டு, "ஆ! எட்டி குமாரா! செவிக்கினிமையாய் வாசித்துக்கொண்டிருந்த நீ இவ்வளவு விரைவில் மிகவும் கொடுமையாய் வாசிக்கக் காரணமென்ன? உனக்கு நேர்ந்த கவலை யாது?" என வினவினன். உடனே எட்டி குமான் விரைந்தோடி வந்து அக்காவலன் பாதங்களில் வீழ்ந்து வணங்கி, "அரசிளங்குமர! சற்று நேரத்திற்கு முன், மணிமேகலை மலர் கொய்ய வேண்டித் தன் தோழியுடன் உபவனத்திற்குச் சென்றுள். அவளியற்கையழகு மிகவுங் குலைந்திருந்தது. அவளைக் கண்டதும், அநியாயமாய் வெட்டுண்டு உயிர் துறந்த கோவலன் செய்தி என் நினைவுக்கு வந்தது. அதனுல் நான் கலக்கமடைய, என்னை யறியாமலே என் விரல் வாசிக்க வேண்டிய நரம்பை விட்டு வேறு நரம்பின் மேல் சென்றது. இதுவே நானுற்ற வருத்தத்திற்குக் காரணம்" என்றுன். இம்மொழிகளைக் கேட்டதும் உதய குமர மன்னவன் அளவற்ற மகிழ்ச்சி யடைந்து, அவளை யடைவதற்கு அதுவே தக்க தருணமெனக் கருதினுன். பின்பு அவன் எட்டி குமரனை நோக்கி, "நானிப்போதே சென்று மணிமேகலையை என் தேர்மேலேற்றி வருவேன்" என்று சொல்லித் தன் தேரைக் காற்றினுங் கடிதாய் உபவனத்திற்குச் செலுத்தினுன்.

அக்கொற்றவன் அப்பொழிலினருகில் செல்லுங்கால், அவன் தேரொலி மணிமேகலையின் செவியில் பட்டது. உடனே அவள் சுதமதியைப் பார்த்து, "பைங்

தோழீ! உதயகுமான் என்மேல் பெருங் காதல் கொண்டிருக்கின்றானும். முன்பு ஒரு முறை என் தாயாகிய மாதவிக்கு வசந்தமாலை அதைத் தெரிவித்தாள். அதனை நான் நேராய்ச் செவியுற்றிருக்கிறேன். அதோ கேட்பது அவன் தேரொலிபோல்தோற்றுகிறது ஐயோ! அவனிடமிருந்து தப்பித்துக் கொள்வதெப்படி? இனி நான் யாது செய்வேன்?" என மிகவுங் கலக்கமுற்றுத் திகைப்பெய்தி நின்றாள். உடனே சுதமதி, "திருமகள் போல்வாய்! நீ இதைக் குறித்துக் கவல வேண்டா. இதோ இப்பளிங்கறைக்குள் நுழைந்து தாளிட்டுக் கொள். நான் இதன் புறத்தே நின்று உன்னைப் பாதுகாப்பேன்" எனத் தேற்றி, அவளை உள்ளே யனுப்பித் தான் அதன் புறத்தே நின்றாள். பின்பு உதயகுமான், அவ்விருண்ட சோலையில் நுழைந்து மணிமேகலையைப் பல விடங்களில் தேடினான். அவ்வரசிளங்குமாரனணிந்திருந்த விலையுயர்ந்த மணிமாலைகள் ஆங்குள்ள இருளை யொழித்தன. அதனாலவன் அப்பொழிலிற் புகுந்தமை அங்கே சூரியனுதித்தது போலிருந்தது. அப்பால் அவன் தனியாய் நின்ற சுதமதியைக் கண்ணுற்று, "நீ இப்பூம்பொழிலில் தனித்து நிற்பதன் காரணம் நான் நன்கறிவேன் ஆனால், உன்னுடன் வந்த மணிமேகலை யெங்கே? அவளை நான் கண்டு பேச விரும்புகிறேன். அவள் பௌதத முனிவர் குழாம் நீங்கி இங்குத் தனியாய் வரக் காரணமென்ன?" எனத் தன் காதல் வெளிப்பட அவளை வினவினன்.

அதனைச் செவியுற்ற சுதமதி வாயிலில்லாத அறையிலகப்பட்டவர் போல் மனமுளைந்து ஒருவாறு தேறி, அவனை நோக்கிச் செப்பலுற்றனள். "மன்னவன் மைந்தா! முன்பு உங்கள் மூதாதையாகிய கரிகாற் சோழ மன்னவன்

ஒருவனாட்சி புரிந்து வந்தான். அவன் மிக்க இளமையிலேயே செங்கோல் செலுத்த நேர்ந்தது. அப்போது முதியவரிருவர் தம்முள் மாறுபட்டுத் தமது வழக்கைத் தீர்த்துக் கொள்ள அவ்வேந்தன் கோயிலை யணுகினர். அவர்கள் அரியாசனத்தின் மேல் வீற்றிருந்த கரிகாலனைக் கண்டு "இவ்விளைஞன் நமது வழக்கை எவ்வாறு தீர்ப்பான்?" எனத் தமக்குள் ஐயமெய்தினர். அதனைக் குறிப்பாலுணர்ந்த கரிகாலன், உடனே வெளியே சென்று முதுமை வேடம் புனைந்து மீண்டுஞ் சிங்காதனத்தமர்ந்தான். அப்போதவர்கள் மிக்க மகிழ்ச்சியுடன் தமது வழக்கையுரைத்தனர். பின்பு அவ்வேந்தர் வேந்தன் அதைத் தீர விசாரித்து நடுநிலை பிறழாமல் தீர்ப்பளிக்க, அவர்களிருவருங் களிப்படைந்தனர். உடனே கரிகாலன் தன் முதுமை வேடங் குலைத்துப் பழைய வடிவத்துடன் நின்றான். அதனைக் கண்டு அவர்கள் பெருவியப்பும் நாணமு மடைந்து அவ்வேந்தனை வாழ்த்திச் சென்றனர்.

அத்தகைய நீதியும் பெருமையும் வாய்ந்த குலத்திலுதித்த மன்னவனே! நீயும் வயதிலிளையவனாயினும் அறிவில் முதியவனன்றோ! பெண்பாலாகிய யான் உனக்குத் தெரிவிக்கத் தக்கனவு முளவோ? ஆயினும் ஒன்றுமட்டும் உரைக்கின்றேன். அதனை யன்பு கூர்ந்து பொறுமையோடு கேட்டருளல் வேண்டும். இவ்வுடலினிழிவைச் சற்று யோசித்துப் பார். இது முற்பிறப்பில் செய்த தீவினையால் வந்தது. மீண்டும் தீவினைகளை யியற்றுவதற்கு இடமாக உள்ளது. சந்தனம், மலர் முதலிய வாசனைப் பொருள்களைப் புனையாவிட்டால் துர்நாற்றத்தை வெளிப்படுத்துவது. முதுமை யெய்தி மரிக்குந்தன்மை யுடையது. கொடிய பிணிகளுக்கு இருப்பிடமாக வுள்ளது. பலவித

விருப்பங்களுக்கும் உறைவிடமானது. சகல பாவங்களுக்கும் வாசஸ்தானமானது. பாம்புகள் வசிக்கும் புற்றுப் போலக் கோபம், பகை முதலிய தீக்குணங்கள் தங்குதற்கு இடமானது. கவலை, துன்பம் முதலியவை குடிகொண்டது. ஆடையணிகளாலும் வாசனைச் சுண்ணங்களாலும் ஒருவாறு விளங்குவது. இதனை அறிவுடையார் ஒருபொருளாக மதியார். இது பற்றி யன்றோ,

" குடருங் கொழுவுங் குருதியும் என்பும்
தொடரும் நரம்பொடு தோலும்—இடையிடையே
வைத்த தடியும் வழும்புமாம்; மற்றிவற்றுள்
எத்திறத்தள்? ஈர்ங்கோதை யாள்."

"பண்ட மறியார் படுசாந்துங் கோதையும்
கண்டுபா ராட்டுவார் கண்டிலர்கொல்? மண்டிப்
பெடைச்சேவல் வன்கழுகு பேர்த்திட்டுக் குத்தல்
முடைச்சாகா டச்சிற் றுழி"

எனக் கல்வி கைவந்த புலவர்கள் மொழிந்தனர். அன்றியும், இவ்வுடலின் உட்புறத்தை வெளிப் புறமாய்த் திருப்பிப் பார். அப்போது அதிலுள்ள அசுத்தங்கள் உனக்குப் புலனும். நீ கல்வி கேள்வியிலும், அறிவு ஆண்மையிலும் சிறந்தவனாதலால், உனக்கு இவ்வளவுஞ் சொன்னேன்" என மக்கள் யாக்கையி னிழிவை மிக நன்று யெடுத்தோதினள். இவ்வினிய சொற்கள் அவ் வேந்தன் செவித்தொளை சேருமுன்பே பளிங்கறையிலிருந்த மணிமேகலையினுருவம் அவன் கண்ணுக்குத் தோன்றினது.

---

## 5. மணிமேகலா தெய்வம் வந்து தோன்றல்

உதயகுமரன் மணிமேகலையி னுருவத்தைக் கண்டதும், சுதமதி கூறிய நீதி மொழிகளனைத்தும், 'செவிடன் காதி லூதிய சங்கு போல்' எள்ளளவும் பயன்படாதொழிந்தன. பின்பு அவன் அப்பளிங்கு மண்டபத்தை யணுகி அதனுள்ளே நுழையக் கருதினான். ஆனால் அவ் வறையின் வாயில் அவனுக்குப் புலப்படவில்லை. அதனை யறிய விரும்பி அவன் அப்பளிங்கறையின் சுவரைத் தன் கையால் தடவிக் கொண்டே சென்றான். அவ்வாறு சென்றவன் சுதமதியை நோக்கி, "மணிமேகலை எங்கே யிருக்கின்றாள்? அவள் எப்படிப்பட்ட தன்மையுடையவள்?" என வினவினான்.

அதற்குச் சுதமதி, "மன்னவரேறே! கேட்பாயாக. நீ ஆண்மையிலும் இளமையிலும் பேரழகிலும் முருகக் கடவுளை யொப்பவன். ஆயினும் அவள் உன்னைக் கண்ணெடுத்துப் பாராள். சிறந்த தவநெறியிலொழுகுபவள்; தனக்குத் திங்கு செய்வோரைச் சபிக்க வல்லவள்; மன்மதனை வென்றவள். நீ அவளை விரும்புதல் சிறிதும் தகாது." எனப் புகன்றனள். அது தெய்வ வனமாதலாலும், தவவொழுக்கம் பூண்ட பெரியோர் வசித்தலாலும், அங்கு அவன் எவ்விதத் திங்கும் செய்ய முயலவில்லை. அவ்வனத்திலாயினும் அதன் அருகிலாயினும் எவரேனும் யாதேனும் இழிதொழில் இயற்றினால் அவர்கள் அப்போதே அழிவுறுவர். இதை உதயகுமரன் நன்று யறிந்திருந்ததனால், அவ்வனத்தை விட்டுச் செல்ல முயன்றான். அப்போதவன் சுதமதியை நோக்கி, "தேன்

மொழியாய்! மணிமேகலை எப்படிப்பட்ட சிறந்த ஒழுக்க முடையவளாயினும், அவளை நானடைய முயல்வேன். இது நிற்க, உன்னை முன்பு ஒரு கந்தருவன் கொண்டுபோன தாகவும், சிலநாள் கழிந்தபின் அவன் உன்னை மீண்டுங் கொணர்ந்து துறவொழுக்கம் பூண்ட சமண மாதர்களின் கூட்டத்தில் விட்டுச் சென்றதாகவும் ஊரிலுள்ளார் பலர் உரைக்கின்றனர். அவ்வாறாக, நீ புத்த மதத்தை மேற் கொண்டொழுகும் மணிமேகலையுடன் வரக் காரண மென்ன? அதனை யெனக்கு விளங்கச் சொல்'' என்றான்.

அதனைக்கேட்ட சுதமதி சொல்லலுற்றாள்:—''வெற்றி வேல் வேந்தே! நீர் மொழிந்தன யாவும் உண்மையே. யான் சண்பை நகரில் அந்தணர் குலத்தி லுதித்தேன். என் தந்தையின் பேர் கௌசிகன். என் தாய் என் இள மைப் பருவத்திலேயே விண்ணுலக மடைந்தனள். என் தந்தை என்னை மிக்க அன்புடன் ஆதரித்து வந்தார். ஒரு நாள் நான் தன்னந் தனியே சென்று என் மாளிகைக் கருகிலுள்ள ஒரு நந்தவனத்தில் மலர் பறித்துக் கொண் டிருந்தேன். அப்போது மாருதவேக னென்னும் வித்தியா தர னொருவன் இந்நகரில் நடக்கும் இந்திர விழாவைக் காண வந்தான். அவன் என் கட்டழகைக் கண்டு வியந்து என்னை விண்ணகம் தூக்கிக்கொண்டு சென்று சில நாள் கழிந்த பின் மீண்டும் என்னை இந்நகரத்திலுள்ள சமண சந்நியாசிகளின் கூட்டத்தில் விட்டுச் சென்றான். நான் அங்கே சிலநாள் தங்கி யிருந்தேன்.

''பின்பு என் தந்தை என்னை யிழந்தமைக்கு மிகவும் பரிதபித்து, என்னைத் தேடிக்கொண்டே கன்னியாகுமரி யாற்றிற்கு நீராடச் செல்பவர்களுடன் சென்றார். அதன் பிறகு இந்த நகரில் காவிரி கடலோடு கலக்குந் துறைமுகத்




அவளை நானடைய முயல்வேன்.

தில் சில வேதியருடன் நீராட வந்தார். அப்போதவர் என்னைக் கண்டு கலங்கி, "நீ யிங்கே எப்படி வந்தாய்?" என்றார். நான் நடந்தவற்றை யெல்லாம் ஒளியாமல் உள்ளபடி யுரைத்தேன். அவர் என்மேலுள்ள அன்பின் மிகுதியால் என்னைக் கைவிடவில்லை. பின்பு அவர் இல்லங் கள்தோறும் சென்று இரந்து அதனால் கிடைத்த உணவை எனக்கும் நல்கித் தாமுமுண்டு பொழுது போக்கி வந்தார்.

"இவ்வாறு சிலநாட்கள் சென்றன. ஒருநாள் அவர் தமது வழக்கம்போல் பிச்சை யெடுக்க வெளியேபோனார். அப்போது இளங் கன்றையுடைய ஒரு பசு அவர் மேல் பாய்ந்து, தன் கோடுகளால் குத்தி அவர் வயிற்றைக் கிழித்து விட்டது. உடனே அவர் குடல் வெளியே சரிந்து போயிற்று. பிறகு அவர் செவ்வலரி மாலையைப் போல் அக்குடலைக் கையிலேந்திக் கொண்டு பொறுக்க முடியாத துன்பத்துடன் நானிருந்த சமண முனிவர்கள் இருப்பிட மணுகி, "ஐயன்மீர்! யானுங்க ளடைக்கலம். பொறுத் தற்கரிய துன்பத்தால் வருந்துகிறேன். எளியேன் மேல் அருள் கூர்ந்து ஆதரிக்க வேண்டும்" என அவர்களைப் பல வாறு இரந்தனர். என் தந்தையின் பரிதபிக்கத் தக்க நிலைமையைக் கண்டு அவர்கள் சிறிதும் இரக்கம் பாராட்ட வில்லை. ஆனால் அவர்கள் மிக்க சீற்றத்துடன் அவருடன் என்னையும் அப்புறம் போகும்படி கையால் குறிப்பித்த னர். உடனே நாங்களிருவரும் அங்கு நின்று மகன்று கண்ணீர் ஆறாய்ப் பெருகக் கதறிக் கொண்டே, "எங்க ளைப் பாதுகாப்பவ ரின்மையால் நாங்கள் கதியற்றுப் பா தவிக்கிறோம். எங்களை யாதரிக்கும் புண்ணியவான்கள் இந்நகரத்தில் ஒருவரு மில்லையா?" எனக் கூவி முறையிட் டோம்.

"அப்போது கருணை ததும்பும் முகத்தையுடையவராகிய ஒரு வள்ளல் எம்மெதிரில் தோன்றினர். அவர் தோன்றினமை வெய்யிலின் வெப்பம் பொறுமல் வருந்துவோர்க்குக் குளிர்ந்த சந்திரன் எதிர்ப்பட்டாற் போலிருந்தது. பொன்போல் துலங்கும் மஞ்சள் நிறம் வாய்ந்த ஆடையை அவர் அணிந்திருந்தார். மனைகள் தோறுஞ் சென்று இரப்பதற்குரிய ஒரு பாத்திரம் அவர் கையிலிருந்தது. அவர் எங்கள் கூக்குரலைக் கேட்டதும், எங்களிடம் விரைந்து வந்து, "ஐயோ! உங்களுக்கு நேர்ந்த இடுக்கண் யாது? என்னாலியன்ற எளிய உதவியை நானுங்களுக்குச் செய்வேன். இதைக் குறித்து நீங்கள் சிறிதும் வருந்தாதீர்." என எமக்கு ஆறுதல் கூறி, எம்மைக் குளிர நோக்கித் தமது இனிய மொழிகளால் எமது துன்பத்தை ஒருவாறு தணித்தனர். பின்பு அவர் தமது கரத்திலுள்ள பிச்சைப் பாத்திரத்தை என்னிடமளித்து என் தந்தையைத் தமது கைகளால் தழுவி யெடுத்துக் கொண்டு பௌத்த சந்நியாசிகள் உறைவிட மணுகினர். அங்கே அவர்செய்த பேருதவியால் என் தந்தையின் மரண வேதனை நீங்கினது. இவ்வளவு பேருதவி புரிந்த புண்ணிய சீலர் சங்கதருமரென்னும் பௌத்த முனிவராவர். அன்றியும் அவர் எம்மிடமிரங்கி எமக்கருளிய அமுதினு மினிய மொழியைக் கேட்பீராக.

"எமது கடவுள் இயல்பாகவே தோன்றிய நற்குணங்களை யுடையவன். பல பிறப்புக்களிலும் பிறந்து பிறந்துணர்ந்தவன். தனது நலத்தைக் கருதாமல் பிறர்க்கே உரிமை பூண்டொழுகுபவன். உயிர்கள் இன்பமடையும்படி கருணையை மேற்கொண்டவன். தரும மார்க்கத்தை உலகத்தாருக்குப் பலவாறாக உபதேசித்து மாரனை வென்ற

வன். அத்தன்மை வாய்ந்த தேவன் புத்த தேவனே" என உபதேசித்தார். அன்று முதல் அப்புத்த தேவரின் சரண கமலங்களை யல்லது எமது நா வேறொன்றையும் பாராட்டாது. நான் சமண சமயத்தைக் கைவிட்டுப் பௌத்த மதத்தை மேற்கொண்டமைக்குக் காரண மிதுவே. அது முதல் நான் பௌத்த சந்நியாசிகளுடன் வசிக்கும் மாதவியுடன் சேர்ந்து வாழ்ந்து வருகிறேன். இன்று மணிமேகலை மலர் கொய்ய வரவே நான் அவளுக்கு உதவியாக இங்கு வந்தேன். என் வரலாறு இதுவே யாகும்." என்றனள்.

பின்பு உதயகுமரன் சுதமதியை நோக்கி, "மீனென மிளிருங் கண்ணாய்! உன் வரலாறு முற்றும் அறிந்தேன். இனி மணிமேகலையை மாதவியின் தாயாகிய சித்திராபதி யின் மூலமாய் அடைய முயல்வேன்." எனச் சொல்லி அச் சோலையை விட்டு நீங்கினன். பின்பு மணிமேகலை பளிங் கறையை விட்டு வெளியே வந்து சுதமதியை நோக்கி, "பைந்தொடி நங்காய்! அவ்விளங்குமரன், கற்பற்றவ ளென்றும், சிறந்த தவவுணர்ச்சி யில்லாதவளென்றும், வருணத்திற் கேற்ற காவலில்லாதவளென்றும், விலை மாதென்றும் என்னைப் பலவாறு இழித்துக் கூறினன். அப்படி யிருந்தும், என் மனம் அவன்மேல் செல்லலுற் றது. காதலின் இயல்பு இதுதான் போலும். அவ்வா றாயின் அக்கொடிய காதலின் தன்மை அழிவதாக." என அறைந்தனள்.

அத்தருணம் அங்கு நடக்கும் இந்திர விழாவைக் காண மணிமேகலை யென்னும் ஒரு தெய்வம் வந்தது. அது மணிமேகலைக்கு நன்மை செய்யக் கருதி அவளுக்குத் தெரிந்தவளும், மாய வித்தைகள் செய்பவளுமாகிய ஒரு

மடந்தை வேடங் கொண்டு அவ்விருவரையு மணுகிப் பளிங் கறையிலிருந்த புத்த தேவர் பாத பீடத்தை வலம் வந்து மேலே எழும்பி நின்று,

"புலவன் தீர்த்தன் புண்ணியன் புராணன்
உலக நோன்பின் உயர்ந்தோ யென்கோ!
குற்றங் கெடுத்தோய்! செற்றஞ் செறுத்தோய்!
முற்ற வுணர்ந்த முதல்வா வென்கோ!
காமற் கடந்தோய்! ஏம மாயோய்!
தீநெறிக் கடும்பகை கடிந்தோ யென்கோ!
ஆயிர வாரத் தாழியான் திருந்தடி
நாவா யிரமிலே னேத்துவ தெவன்"

என்று புத்த தேவனை வாயார வாழ்த்தி நின்றது. அப்போது சூரியன் மேற்குத் திக்கில் மறைந்தனன். உடனே அந்திமாலை வந்தது. பறவைகளெல்லாம் கூடுகளிலும் மரக் கிளைகளிலும் போய்ச் சேர்ந்தன. வெளியே சென்ற எருதுகளும் பசுக்களும் தத்தம் கழுத்தில் கட்டப்பட்ட மணிகள் கணகணவென் றொலிக்கத் தொழுவங்களைப் போயடைந்தன. தடாகங்களிலுள்ள தாமரை மலர்கள் குவிந்தன. நீலம் அல்லி முதலியவை மலர்ந்தன. அழகி லும் குணத்திலும் திருமகளை யொத்த மாதர்கள் தத்தம் மனைகள்தோறும் விளக்கேற்றினர்.

---

## 6. மணிமேகலா தெய்வம் சக்கரவாளக் கோட்ட முரைத்தல்

அவ்வாறு தோன்றிய அந்திமாலை செல்வச் செருக் கினை யுடைய கீழ்மக்கள் மிக்க விரைவில் அழிவுறுவது போல் நீங்கியது. உடனே,

“ வண்டா ய்யன்நான் மறைபாட மலர்ந்த தொருதா மரைப்போது
பண்டா லிலையின் மிசைக்கிடந்து பாரும் நீரும் பசித்தான்போல்
உண்டா னுந்திக் கமலத்தே ஓதக் கடலுக் தீன்றவேறோர்
வெண்டா மரையின் மலர்பூத்த தொத்த தாழி வெண்திங்கள்.”

என்றபடி, கடலில் வெண்தாமரை மலர்ந்தாற்போல் கீழ்த் திசையில் சந்திர னுதித்தது. சான்றோர் செய்யும் அற்பக் குற்றங்களும் வெளிப்படையாய் விளங்குவது போல் அதன்கண் களங்கம் காணப் பட்டது. வெள்ளியால் செய்யப்பட்ட வெண்மையாகிய குடத்திலிருந்து பால் பெருகி வழிவதுபோல் பூம்பொழில், தாமரைப் பொய்கை, உயர்ந்த மலை, அழகிய மாளிகை முதலிய விடங்களி லெல்லாம் அதன் தண்கதிர் பாவின. நீலவாடையா லமைக்கப்பட்ட பந்தலில் முத்துக்களைப் பதித்தாற்போல் ஆகாயத்தில் நட்சத்திரங்கள் விளங்கின. அப்போது இந்திரவில் ஒளிவிட்டு விளங்குவது போன்ற அழகிய திருமேனியை யுடைய மணிமேகலா தெய்வம் மீண்டும் புத்த பீடத்தைத் தொழுது சுதமதியை நோக்கி, “நீங்கள் இங்கே திகைத்து நிற்பதேன்? உங்களுக்கு நேர்ந்த துன்பம் யாது” என வினவிற்று.

அதற்குச் சுதமதி, என்னுயிருர்த் தோழீ! உதயகுமர மன்னவன் சற்று நேரத்திற்கு முன் இங்கு வந்து மணிமேகலையைக் கவர்ந்தேகக் கருதினன். நான் அவனுக்குப் பல நீதிகளை எடுத்தோதித் தடுத்தேன். அவன் அவற்றையெல்லாங் கேளாமல், சித்திராபதியின் மூலமாய் எவ்வாறாயினும் அவளைப் பெறுவதாய்ச் சொல்லிப் போனான். அதனால் நாங்கள் தியங்கி நிற்கிறோம்” என்றனள்.

அதற்கு அத்தெய்வம், “மணிமேகலையின் பால் உதயகுமரனுக்குள்ள காதல் சிறிதுந் தணிந்திலது. இது

முனிவர்களுறையுமிட மாதலால், இங்குத் தீத்தொழில் புரிய அஞ்சி அவன் அப்புற மகன்றனன். நீங்கள் இவ் வனத்தைவிட்டு வெளியே சென்றால், அவன் அவளைத் தனக்குரிமையாக்கிக் கொள்வது நிச்சயம். ஆதலால் நீங்கள் இச்சோலைக்கு மேற்கிலுள்ள சிறிய வாயில் வழி யாய்ச் சிறந்த முனிவர் வசிக்கும் சக்கரவாளக் கோட்டத் திற்குச் செல்லுங்கள். அங்கே இராப்போதிலும் உங்க ளுக்கு ஒருவிதத் துன்பமு மணுகாது" என்று சொல் லிற்று.

அப்போது சுதமதி, "வஞ்சகனாகிய மாருத வேகனும் நீயுமே அதனைச் சக்கரவாளக் கோட்டம் என்பீர்; மற்றவ ரெல்லாம் சுடுகாட்டுக் கோட்டம் என்பார். நீ அதனைச் சக்கரவாளக் கோட்டம் என்பதற்குக் காரணமென்ன? அதனை எனக்கு விளங்கச் சொல்ல வேண்டும்" என்றனள்.

அதற்கு அத்தெய்வம், சுதமதியை நோக்கி, "அரிவை யர் திலகமே! சொல்கிறேன் கேள். இச்சோலையின் புறத் திலுள்ள சுடுகாடு காவிரிப்பூம்பட்டினம் தோன்றிய காலத்தே உண்டானதாகும். அதில் பிணப் பறையோ சையும், இறந்தோர்க்கு அழுவோரோசையும் நரி, ஆந்தை, கோட்டான் முதலியவற்றின் பேரொலியும் நிரம்பியிருக் கும். அன்றியும், அது

"பிணங்கள்சுடுங் கடும்புலைய ராவத் தாலும்,
பிளந்துதலை வெடித்திடுபே ரமலை யாலும்,
நிணங்கருகிச் சுருநாறு முடையி னாலும்,
நெடுங்கனலின் கொழுந்தெழுந்த நிவப்பி னாலும்,
கணங்கள்மிகக் களித்தாடுந் துழனி யாலும்,
கனற்பொறியின் மலிவாலும், புகையி னாலும்,
சுணங்குபல பிணங்குபெருங் குரைப்பி னாலும்"

தன்னைக் கண்டவர்க்கு மிகுதியும் அச்சத்தை விளைவிக்கும். அதில் நெருப்புப் பாண்டங்களும், அறுத்தெறிந்த மாலைகளும், உடைந்த குடங்களும், பிணங்களைச் சுமந்து சென்ற பாடைகளும் நிரம்பி யிருக்கும்.

ஒருநாளிரவு சார்ங்கலனென்னும் வேதியர் சிறுவ னொருவன் அம்மயானத்தை யோர் நகரமெனக் கருதி அதன் வழியே சென்றான். அப்போதொரு பெண்பேய் அச்சுடலையில் கிடந்த ஒரு பெண்ணின் தலையைத் தன் கையிலேந்தி அத்தலையிலுள்ள கண்ணைத் தோண்டித் தின்று கொண்டே களிப்பின் மிகுதியால் கூத்தாடத் தொடங்கிற்று. அச்சிறுவன் அதைக் கண்டு மிகவும் வெருண்டு, "ஐயோ! ஐயோ!! செத்தேன் ! செத்தேன்!!" எனக் கூவிக் கொண்டோடித் தன் தாய்முன் வீழ்ந்தான். பின்பு அவன் நிகழ்ந்தவற்றைத் தன் தாய்க் குரைத்து உடனே உயிர் துறந்தான்.

அப்போதவன் தாயாகிய கோதமை யென்பவள் மிகவும் வருந்தி, அவனைத் தன் மார்பி லணைத்துக் கொண்டு அம்மயானமணுகி, " காவிரிப்பூம்பட்டினத்துத் தேவதையாகிய சம்பாபதி! நானுமென் நாயகனும் முதுமைப் பருவ மடைந்து கண்களையு மிழந்தோம். எங்களுக்கு உதவி செய்வார் யாரேனு முண்டா ? இது நீயறியாத தல்லவே ! அவ்வாறிருந்தும், இந்நகரம் முற்றும் காக்கும் நீ என் மகனை மாத்திரம் காவா தொழிந்த தென்னை ?" என முறையிட்டனள். அப்போது அந்தத் தெய்வம் அவளுக்குத் தோன்றி, " பெண்ணருங்கலமே! உன் மகனுயிரைப் பேய் கவர்ந்திலது. அவனறியாமை காரணமாக அவன் தீவினையே அவனைக் கொன்றது. ஆதலால், நீ கொண்ட துயரத்தை யொழித்தருள்" என்றது.

அதற்கு அப்பார்ப்பனி, "தாயே! என்மேல் அன்பு கூர்ந்து என்னுயிரைப் பெற்றுக்கொண்டாவது இவனுயிரைத் தந்தருள். முதுமைப் பருவ மெய்திக் கண்ணிழந்து பாதவிக்கும் என் கணவனுக்கு இவன் பேருதவியாயிருப்பான். இல்லாவிடில், நானிப்போதே இவ்விடத்திலேயே என் உயிரைத் துறப்பேன்" என்றாள். அதற்குச் சம்பாபதி, "உயிர் உடலை விட்டு நீங்கினதும் அது வினை வழியே சென்று வேறு பிறப்பை யடையும். ஆதலால், நீ சொல்கிறபடி செய்ய என்னால் முடியாது. முழுமுதற் கடவுளை யொழிய, அதனைச் செய்து முடிக்க வல்லார் வேறு யார்? வேண்டுமானால், அவரொழிந்த மற்றைத் தெய்வங்களை யெல்லாம் இங்கே வரவழைக்கின்றேன் பார்." என்று சொல்லி, உடனே பலவகையாகிய தேவர்களை வரவழைத்தது. அவர்களனைவரும் கோதமை கொண்ட துன்பத்தை யொழிக்கத் தம்மாலும் முடியா தெனவே மொழிந்து விட்டனர். பின்பு கோதமை ஒருவாறு மனந்தேறித் தன் மகனை யடக்கஞ் செய்து தானும் உயிர் நீத்தாள்.

அப்பால், சம்பாபதியின் ஆற்றல் தோன்ற எல்லாத் தேவர்களும் கூடிய அவ்விடத்தில், மயன் என்னுந் தெய்வத்தச்சன் சக்கரவாளக் கோட்டத்தை யேற்படுத்தினான். அது சுடலையைச் சார்ந்திருப்பதனால் அதனைச் சுடுகாட்டுக் கோட்டம் எனப் பலரும் மொழிய லாயினர். அதன் வரலாறு இதுவாகும்." எனக் கூறி முடித்தாள். சிறிது நேரத்திற்குப் பிறகு சுதமதி தூங்கலானாள். உடனே அத்தெய்வம் மணிமேகலையைத் தன் மந்திர வல்லமையால் மயக்கி, அவளைத் தூக்கிக் கொண்டுபோய் மணிபல்லவ மென்னும் ஒரு தீவில் சேர்த்தது. அது அப்பொழிலுக்குத் தெற்கே முப்பது யோசனை தூரத்திலுள்ளது.

## 7. மணிமேகலா தெய்வம் சுதமதியைத் துயிலினின் றெழுப்பல்

மணிமேகலா தெய்வம் மணிமேகலையை மணிபல்லவத்தில் சேர்த்த பின் உதயகுமாரனைக் குறுகினது. அவன் மணிமேகலை பால் மிக்க காதல் கொண்டிருந்தான். அதனாலவன் அன்றிரவெல்லாம் உறங்காமல், "பொழுது புலர்ந்ததும், எந்த விதமாயினும் மணிமேகலையை எனக்குரிமையாக்கிக் கொள்வேன்" என்றெண்ணித் தன் படுக்கையில் படுத்திருந்தான். அப்போது அந்தத் தெய்வம் அவ்வரசிளங்குமானுக்கு,

> " முன்னர்த் தோன்றி, மன்னவன் மகனே !
> கோன்நிலை திரிந்திடில் கோள்நிலை திரியும் ;
> கோள்நிலை திரிந்திடில் மாரிவறங் கூறும் ;
> மாரிவறங் கூறின் மன்னுயி ரில்லை ;
> மன்னுயி ரெல்லாம் மண்ணாள் வேந்தன்
> தன்னுயி ரென்னுந் தகுதியின் றாகும்."

ஆதலால், தவவேடம் பூண்டொழுகும் மணிமேகலை பால் நீ கொண்ட விருப்பத்தை யொழிக" என உரைத்தது.

பின்பு அது உபவனம் புகுந்து அங்கு உறங்கிக்கொண்டிருந்த சுதமதியை யெழுப்பி, "பெண்ணமுதே ! நான் மணிமேகலை யென்னுந் தெய்வம். இந்திர விழாவைக் காண விரும்பி இங்கு வந்தேன். நீ சிறிதும் அஞ்சாதே. புத்த சமயத்தைக் கடைப்பிடித்து ஒழுகுதற்குரிய நல்வினைப் பயன் மணிமேகலைக்கு உண்டாய் விட்டது. ஆதலால், நானவளை என் மந்திர வல்லமையால் மணிபல்லவத்தில் கொண்டு போய்ச் சேர்த்தேன். அவள் தன் முற்பிறப்

பின் . வரலாற்றைச் செவ்வையா யுணர்ந்து இன்றைய ஏழாம் நாள் மீண்டும் இந்நகரை யடைவாள். அப்போது இங்கே பல அற்புதங்கள் உண்டாகும். அவள் வேற்றுரு வத்துடன் இங்கு வருவாள். ஆயினும் உனக்கு மாத்திரம் நன்றாய்த் தெரிவாள். இங்கு நடந்தவற்றை யெல்லாம் மாதவிக்குச் சொல். அவள் என்னை முன்பே அறிவாள். எவ்வாறெனில், மணிமேகலை பிறந்ததும் கோவலன் தன் குல தெய்வமாகிய என் பேரை அவளுக்கிட்டான். அன்று இரவே நான் மாதவியின் கனவில் தோன்றி, "காமன் செயலற்றுப் பாதபிக்கும்படி சிறந்த தவப் புதல்வியைப் பெற்றாய்" என வியம்பினேன். அதையும் அவளுக்கு நினைப்பூட்டு" எனக்கூறி அந்தத் தெய்வம் மறைந்தது.

பின்பு சுதமதி மணிமேகலையின் பிரிவுக்காற்றாது கலக்கமடைந்து, அப்பூம்பொழிலின் மேற்கேயுள்ள சிறிய வாயில் வழியாய்ச் சக்கரவாளக் கோட்டஞ் செல்லத் தொடங்கினாள். எங்கும் பேரிருள் பரவி யிருந்தது. அந் நள்ளிருளில், ஊர்க்காவலர் துடியோசை கறங்கிற்று. கோட்டான், ஆந்தை முதலிய பறவைகள் ஒலித்தன. நாய் களின் குரைப்பும், நரிகளின் ஊளையும் அச்சத்தை விளை வித்தன. ஆகா! அவ்விருளின் கொடுமையை என்னவென் றியம்பலாம்.

> " அள்ளிக் கொளலாய், அடையத் திரண்டொன்றாய்,
> கொள்ளிக்கும் விள்ளாத கூரிருளாய்,—உள்ளம்
> புதையவே வைத்த பொதுமகளிர் தங்கள்
> இதயமே போன்ற இரா."

என்றபடி, இன்னின்ன விடங்களில் இன்னின்ன பொருள்க ளிருக்கின்றன வென அறிய முடியவில்லை. பேய்களும்

தனித்துச் செல்ல அஞ்சும் அப்பேரிருளில், சுதமதி நடுக்கத்துடன் சென்று சக்கரவாளக்கோட்ட மணுகி, ஆங்குள்ள * உலகவறவியின் ஒரு புறத்தே தங்கி யிருந்தாள்.

அத்தருணம் அங்குள்ள தூணிலமைக்கப்பட்ட தெய்வத் தன்மை வாய்ந்த பாவை யொன்று சுதமதியை நோக்கி, "மைத்தடங் கண்ணாய்! முற்பிறப்பில் நீயும் மாதவியும், மணிமேகலையும் இரவிவன்மனென்னும் மன்னவனது மகளிர்களாகத் தோன்றினீர்கள். அவ்வேந்தன் அசோதர நகரத்தை யாட்சி புரிந்து வந்தான். அவன் மாதவிக்குத் தாரையெனவும், உனக்கு வீரை யெனவும், மணிமேகலைக்கு இலக்குமி யெனவும் நாமகரணம் செய்து உங்கள் மூவரையும் மிக்க அன்புடன் வளர்த்து வந்தான். பின்பு அவன் அங்க நாட்டிலுள்ள கச்சயமென்னும் நகரத்திறைவனாகிய துச்சய னென்பவனுக்கு நின்னை மணமியற்றித் தந்தனன். சில நாள் சென்ற பின், உன் முன் பிறந்தவளாகிய தாரை யென்பவள் ஒரு யானையால் கொல்லப்பட்டாள். அப்போது நீ மதுவைக் குடித்த மயக்கத்தாலும், உன் தமக்கைபாலுள்ள அன்பின் மிகுதியாலும் உடனே உயிர் நீத்தாய். பின்பு நீ கௌசிகன் மகளாய்த் தோன்றி மாருதவேக னென்பவனால் இங்குக் கொணரப்பட்டு மாதவியுடன் வசிக்கலானாய். இனி, உன் பின் பிறந்தவளாகிய இலக்குமி யென்பவள் தன் முற்பிறப்பையும், உன் முற்பிறப்பையு முணர்ந்து கொண்டு இன்றைய ஏழாம்நாளிரவில் இந்நகர மணுகுவாள். அவளைக் குறித்து நீ சிறிதும் அஞ்சாதே." எனக் கூறிற்று.

---

* இது ஊரிலுள்ளார் பலரும் வந்து தங்குவதற்குரிய பொதுவிடம்; இது காவிரிப்பூம் பட்டினத்தில் சக்கரவாளக் கோட்டத்தில் சம்பாபதிக் கோவிலின் முற்புறத்திலுள்ளது.

பின்பு சுதமதி மிக்க கலக்கத்துடன் தன்னிருப்பிட மனுகப் புறப்பட்டனள். அப்போது பொழுது புலருந் தருணமா யிருந்தது. சேவல், காகம் முதலிய பறவைகள் ஒலித்தன. ஊரிலுள்ள ஆடவர் மகளிர் அனைவரும் கண் விழித்துத் தத்தந்தொழில்களைச் செய்யத் தொடங்கினர். திருமாலின் அழகிய மார்பிலுள்ள கௌஸ்துபாபரணம் போல் சூரியனுதித்தான். பின்பு, சுதமதி மாதவியை யணுகி நடந்தவற்றை யெல்லாம் உரைத்தாள். அவற்றை யெல்லாங் கேட்ட மாதவி சிறந்த மாணிக்கத்தை யிழந்த நாகம் போல் மணிமேகலையின் பிரிவுக்காற்றுமல் வருந்திக் கிடந்தாள்.

---

## 8. மணிமேகலை மணிபல்லவத்தில் துயரமடைதல்

இங்கே சுதமதி, மாதவி என்னும் இவர்கள் நிலைமை இவ்வாறாக, மணிமேகலையைப் பற்றிக் கவனிப்போம். அவள் மணிபல்லவத்தில் கடலருகில் துயில் புரிந்துகொண் டிருந்தன ளல்லவா? பொழுது புலருந் தருணம் அவள் பொட்டென விழித்துக் கொண்டனள். அப்போதவள் தான் வேற்றூரில் தன்னந்தனியா யிருப்பதை யறிந்து பெரிதும் வருந்தினுள். சிறிது நேரங்கழிந்த பின் சூரிய னுதித்தான். பின்பு அவள் "ஒருகால் நாமிருப்பது உப வனத்தின் ஒரு பகுதி போலும்; இதனை நாம் முன்பு கண்டிலமோ?" எனக் கருதி, சுதமதியைக் கூவியழைத்துப் பலவாறு புலம்பினுள். பின்பு, "ஐயோ! இராப்போது கழிந்து விட்டதே! என் பிரிவின் பொருட்டு என் தாயாகிய மாதவி பெரிதும் வருந்துவாளே! மந்திர வித்தைகளில் தேர்ச்சி பெற்றவளாகிய அம்மடந்தை செய்த வஞ்

சமோ இது! நான் தனியா யிருப்பதற்கு அஞ்சுகிறேன். ஐயோ! இனி யான் யாது செய்வேன்? சுதமதி! விரைந்து வருவாயாக! "எனக்கதறிக் கொண்டே நீர்த்துறைகளிலும் மணற் குன்றுகளிலும் அவளைத் தேடிச் சென்றனள். அங்கே ஒருவரும் அகப்படவில்லை. பின்பு அவள் தனது கூந்தல் குலைந்து சோரக் கூவியழுது துன்ப மேலீட்டால், "அழகிய வளையலை யணிந்த கண்ணகியோடு மதுரைக்குச் சென்று கூரிய வாளால் வெட்டுண்டு வருந்திய மார்பினை யுடையூ ஐயாவோ!" எனத் தன் தந்தையை நினைத்துத் தேம்பித் தேம்பி யழுதாள்.

அப்போது ஒரு பாத பீடிகை அவள் கண்ணுக்குப் புலப்பட்டது. ஆகா! அதன் பெருமையை என்ன வென்று சொல்லலாம்! அதனைச் சூழ்ந்துள்ள மரங்கள் சிறந்த புதிய மலர்களை யொழிய மற்றவற்றை அதன்மேல் சொரியா; பறவைகளும் அதன் பக்கத்தே சென்று தமது சிறையொலியை யெழுப்பா. அப்பீடம் தேவேந்திரனல் ஏற்படுத்தப் பட்டதும் பெரிய இரத்தினங்கள் பதிப்பிக்கப் பட்டதுமாம். அது தன்னைக் காணப் பெற்றோர்க்கு அவர் கள் முற்பிறப்பை யறிவிக்கும். இத்தகைய பெருமை வாய்ந்ததும் தருமமே வடிவு கொண்டாற் போல்வது மாகிய ஸ்ரீ புத்ததேவனது பாதபீடத்தை அவள் கண்டு களித்தனள்.

---

## 9. மணிமேகலை ஸ்ரீபுத்தபீடத்தைக் கண்டு பிறப்புணர்தல்

மணிமேகலை ஸ்ரீ புத்ததேவனது பாதபீடத்தைக் கண்டதும், அவள் கைகள் தலைமேல் குவிந்தன. கண்களிலிருந்து ஆநந்தக் கண்ணீர் பெருகினது. பின்பு அவள் அப்பீடத்தை மும்முறை வலம் வந்து மின்னற்கொடி மேகத்துடன் பூமியின்மேல் விழுந்தது போல் தன் கூந்தல் குலையத் தீர்க்க தண்டன் செய்தாள். அவ்வாறு செய்து எழுதலும் அவள் தனது முற்பிறப்பின் வரலாறுகளைச் செவ்வையாயுணர்ந்து, "மாதவ! உண்மைப் பொருளையறிந்தோய்! காயங்கரையில் நீர் சொல்லியன யாவும் உண்மையாகுதலைச் சந்தேகமின்றி யறிந்தேன். முன்பு காந்தார நாட்டில் பூருவதேயத்தில் இடவயமென்னும் நகரில் அரசுபுரிந்த அத்திபதி யென்னும் அரசனுக்கு மைத்துனனாகிய பிரமதருமரே! நீர் ஒருமுறை அம்மன்னவனை யணுகித் தருமோபதேசஞ் செய்தீர். அப்போது நீர் அவனைநோக்கி 'வேந்தர் வேந்தே! இன்றைய எழாம் நாள் ஒரு பெரிய பூகம்பமுண்டாகும். அப்போது இந்நகரம் பாதாலத்தழுந்திக் கேடெய்தும். ஆதலால் நீ இதை விட்டு வேற்றூருக்குச் செல்' என்று மொழிந்தீர். அக்காவலன் அதனை அவ்வாறே தன் நகரமாந்தர்க்கறிவித்து, வடதிசையிலுள்ள அவந்திநகரஞ் செல்லக் கருதி இடைவழியில் காயங்கரை நதிக்கரையிலுள்ள ஒரு சோலையில் தங்கியிருந்தான். பின்பு, நீர் மொழிந்தபடி அந்நகரம் அழிவடைந்தது. அதனைக் கண்ணுற்ற அரசனும் குடிமக்களும் கூடி உம்மை வணங்கிப் பலவாறு துதிக்கலாயினர். அப்போது நீர் அவர்களனைவர்க்கும் முத்திநெறியை உபதேசித்துக் கொண்டிருந்தீர்.

இஃதிவ்வாறாக, கடல்போன்ற ஒலியையுடைய அசோதர நகரத்தில் இரவிவன்மனென்னுமோர் வேந்தன் செங்கோல் செலுத்தி வந்தான். அவன் மனைவியின் பெயர் அமுதபதி. நான் அவ்வமுதபதியின் வயிற்றிலுதித்தேன். என் பெற்றோர் எனக்கு இலக்குமியெனப் பெயரிட்டு மிக்க அன்பாய் வளர்த்துவந்தனர். பின்பு அத்திபதி யென்னும் வேந்தன் மனைவியாகிய நீலபதி யென்பவள் வயிற்றிலுதித்த இராகுலனுக்கு என்னை மணமியற்றித் தந்தனர். தாங்கள் காயங்கரை நதிக்கரையில் பலர்க்கு முத்தி நெறியைப் போதித்துக் கொண்டிருந்த போது நான் என் கணவனுடன் வந்து தங்கள் திருவடிகளைப் பணிந்தேன். அப்போது நீர் என்னை நோக்கி, இன்றைக்குப் பதினாறும் நாள் உன் கணவனாகிய இராகுலன் * திட்டிவிடமென்னும் பாம்பால் உயிர் துறப்பான். உடனே நீ அவனுடன் தீப்வாய். பின்பு நீ காவிரிப்பூம் பட்டினத்தில் சென்று பிறப்புகுவாய். அங்கே உனக்கோர் துன்பம் வரும். அப்போது மணிமேகலா தெய்வம் வந்து உன்னை யாதரிக்கும். அதன் பிறகு நீ புத்த பீடிகையைக் கண்டு வணங்கி உன் முற்பிறப்பின் வரலாற்றை யறிவாய். அன்றியும், இப்போது நான் சொல்லியவற்றையும் தெரிந்து கொள்வாய்.'' என மொழிந்தீர். அப்போது நான் என் கணவன் பிறப்பினையும் எனக்குணர்த்த வேண்டுமெனத் தங்களை வேண்டினேன். அதற்குத் தாங்கள் 'உன்னை யாதரிக்கும் தெய்வம் அதனை யுனக்குத் தெரிவிக்கும்' என்றீர். ஐயோ! அந்தத் தெய்வம் இன்னும் வந்திலதே என வருந்திக் கொண்டிருந்தாள்.

---

* திட்டிவிடம் = த்ருஷ்டி விஷம்; கண்ணால் விஷமுடையதோர் பாம்பு; இதன் பார்வையிலகப்பட்ட பிராணிகள் உடனே உயிர்துறக்கு மென்பர்.

## 10. மணிமேகலை மந்திரம் பெறுதல்

அவள் அவ்வாறு வருந்திக் கொண்டிருக்கையில், "புத்த தேவனது பாதபீட தரிசனத்தால் மணிமேகலை தன் பழம் பிறப்பை யறிந்தாள். அவள் பெற்ற பேறு அழகினை யுடையதாகும்" என நினைத்து, மணமும் அழகும் நிறைந்த மலர்க்கொடி ஆகாயத்திலிருந்து பூமியின்மே லிறங்குவதுபோல் மணிமேகலா தெய்வம் அவள் முன் வந்து தோன்றி அப்புத்த பீடத்தை வணங்கினாள்.

அப்போது மணிமேகலை அத்தெய்வத்தை வணங்கி, "தாயே! உன் திருவருளால் நான் என் பழம் பிறப்பை யறிந்தேன். ஆனால் என் கேள்வனாகிய இராகுலன் எங்கே யிருக்கிறான்? அருள் கூர்ந்து அவன் பிறப்பையும் அறி விக்க வேண்டும்" என்றனள். அதற்கு அந்த அணங்கு "* இலக்குமியே! கேட்பாயாக. ஒருநாள் நீ இராகுல னோடே ஒரு பூம்பொழிலுக்குப் போயினை. அப்போது ஆகாயத்தில் சஞ்சரிப்பவனாகிய சாதுசக்கரனென்னும் சாரணனொருவன் அங்கே தோன்றினான். அவனைக் கண்ட தும் நீ உடல் நடுங்கவும் உள்ளன்பு பெருகவும் சென்று வணங்கினாய். அதைக்கண்ட இராகுலன் அவன் யாவ னென வெகுண்டான். அப்போது நீ அவன் வாயை யடக்கி, 'ஆகாய வழியாய் வந்திறங்கின பெரியோனடிகளை வணங்காமல் இவ்வாறு கூறுதல் தகுமோ?' என்று உன் கணவனையும் உடன்கொண்டு சென்று அவனை மீண்டும் வணங்கி, 'சுவாமி! கேட்பீராக! நாங்கள் உமக்குச்

---

* இது மணிமேகலையின் முற்பிறப்பின் பெயர்; மணிமேகலை தன் பழம்பிறப்பை யறிந்தமையால், அவளை அத்தெய்வம் அவ் வாறு விளித்ததென்க.

சிறந்த அன்பினால்லேம்; ஆயினும், நாங்களளிக்கும் இனிய நீரையும் உணவையும் உண்பீராக. உங்கள் திருவருளின் படியே யொழுக நாங்கள் உரிமையுடையேம்' என மொழிந்தாய். பின்பு அம்முனிவர் அவற்றை அவ்வாறே உண்டு களித்தனர். அவரை யுண்பித்த தருமம் உன் பிறப்பை யொழிக்கும். அந்த இராகுலன் தான் உபவனத்தில் உன்னைச் சந்தித்த உதயகுமரன். அதனால் தான் அவன் உன்னை விரும்பலானான். நீயும் அவனைக் காதலித்தாய். ஆனால், நான் உன் வேட்கையை யொழித்து உன்னை நல்வழிப்படுத்த விரும்பி, இங்கே கொணர்ந்து இப்புத்த பீடிகையை உனக்குக் காட்டினேன்.

"இலக்குமி! இன்னுங் கேட்பாயாக. முற்பிறப்பில் தாரை, வீரையென்னு மிருவர் உன் தமக்கைகளாக உன்னுடன் பிறந்திருந்தனர். அவ்விருவரையும் கச்சயநகரத் திறைவனாகிய துச்சய னென்பவன் மணம் புரிந்துகொண்டான். அவ்வேந்தன் ஒருமுறை தன் மனைவியராகிய அவ் விருவருடனும் கங்கைக்கரை யணுகி அறவணவடிகளைக் கண்டு வணங்கினான். அப்போ தம்முனிவர் அவனை நோக்கி, "முன்பு ஒருகாலத்தில் எல்லா உயிர்களும் நலம் பெறக் கருதிப் புத்த தேவன் ஒரு மலைமேல் நின்று தருமோபதேசஞ் செய்தனர். அப்போதவர் பாதச்சுவடுகள் அம்மலைமேல் பதிந்தன. அதனால் அது பாதபங்கய மலை யெனப்படும். அதனை நீ உன் மனைவியருடன் சென்று தொழுவாயாக" என்றனர். அவனவ்வாறே சென்று அதனை வணங்கினான். அந்த நல்வினைப் பயனால் தாரை மாதவியாகவும், வீரை சுதமதியாகவும் பிறந்து உன்னை வந்து கூடினர். மணிமேகலை! இப்போது நீ உன் முற்பிறப்பின் வரலாற்றை நன்கறிந்துகொண்டாய். அறத்தின் தன்மையையு முணர்ந்

தாய். இனி, பலவகைப் பட்ட சமயவாதிகளின் கொள்கை களையும் உணர்வாய். ஒருகால் அவர்கள், நீ இளையவ ளெனக் கருதித் தத்தம் சமயக்கொள்கைகளை உனக்குச் சொல்லார். அப்போது நீ வேற்றுருவங் கொள்ளவேண்டி வரும்." எனக் கூறி, வேற்றுருவங் கொள்ளத் தக்கதும், ஆகாயவழியே சஞ்சரிப்பதற் குரியதுமாகிய இரண்டு மந்திரங்களை அவளுக்குபதேசித்து, மீண்டும் அவளை நோக்கி, "சிறந்த தவ வொழுக்கமுடைய பெண்ணே! கேட்பாயாக. மக்கள் உடம்பு உணவினாலாகிய தொகுதி யாதலால், இம்மந்திரத்தையும் பெற்றுக்கொள். இது பசிப்பிணியை யொழிக்கும்." எனக் கூறி வேறொரு மந்தி ரத்தையும் கற்பித்து அத்தெய்வம் மறைந்துவிட்டது.

---

## 11. மணிமேகலை பாத்திரம் பெறுதல்

பின்பு மணிமேகலை அப்பூம்பொழிலின் காட்சிகளைக் கண்டு களித்துக் கொண்டிருந்தனள். அப்போது தீவ திலகை யென்னும் ஒரு தெய்வ மாது அங்குத் தோன்றி மணிமேகலையை நோக்கி, "நீ யார்?" என்றனள். அதற்கு மணிமேகலை, "பொற்கொடி போல்வாய்! நான் முற் பிறப்பில் இலக்குமி யெனப் பேர் பெற்று இராகுலனென் னும் மன்னவனுக்கு மனைவியாய் இருந்தேன். இப்பிறவி யில் ஆடல் கணிகையாகிய மாதவியின் மகளாகத் தோன்றி னேன். என் பேர் மணிமேகலை என்பது. என் பேரை யுடைய மணிமேகலா தெய்வம் என்னை இங்கே கொண்டு வந்து சேர்த்தது. நான் இப்புத்த பீடத்தைத் தொழுது என் முற்பிறப்பின் வரலாற்றைச் செவ்வையா யறிந்து கொண்டேன். உன் வரலாற்றை யுரைத்தருளவேண்டும்." என்றனள்.

அதற்கு அத்தெய்வமாது மணிமேகலையை நோக்கி, "பிறைநுதால்! நான் முன்பு ஒருமுறை இரத்தின தீவத்தி லுள்ள புத்த தேவனது பாத பீடிகையைப் பணிந்து விட்டு இங்கு வந்தேன். அப்போது தேவேந்திரன் இந்தப் பாதபீடத்தைப் பாதுகாத்துக் கொண்டு இங்கேயே இருக்கும்படி எனக்குக் கட்டளையிட்டனன். அன்று முதல் அவ்வாறே நானிங்கே இருந்து வருகிறேன். என்பேர் தீவதிலகையாம்" என்றனள். பின்பு அவள் "மணிமேகலாய்! இப்பீடிகைக்குச் சற்றுத் தூரத்தில் கோமுகி யென்னும் ஒரு பொய்கை உண்டு. அதில் தாமரை, நெய்தல் முதலிய மலர்கள் நிரம்பியிருக்கும். நீ அங்கு வந்தால் உனக்கு அமுதசுரபி யென்னும் ஒரு பாத்திரம் கிடைக்கும். அது முன்பு ஆபுத்திரனிட மிருந்தது. அதில் இடப்பட்ட அன்னம்எடுக்குந்தோறும் வளர்ந்து கொண்டே வரும். அப்பாத்திரத்தின் சிறப்பை அறவணவடிகளிடம் கேட்டுத் தெரிந்துகொள்" என மொழிந்து மணிமேகலையைத் தன்னுடனழைத்துக்கொண்டு போய் அத்தடாகத்தை யணுகினாள். உடனே ஒரு பாத்திரம் அந்தத் தடாகத்திலிருந் தெழும்பி மணிமேகலை கையில் வந்து சேர்ந்தது. பின்பு அவள் அளவற்ற மகிழ்ச்சியடைந்து புத்ததேவனை வாயார வாழ்த்தினாள். அப்போது தீவதிலகை அவளை நோக்கி,

"குடிப்பிறப் பழிக்கும்; விழுப்பங் கொல்லும்;
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்;
நாணணி களையும்; மாணெழில் சிதைக்கும்;
பூணணி மாதரொடு புறங்கடை நிறுத்தும்;
பசிப்பிணி யென்னும் பாவி; அது தீர்த்தோர்
இசைச்சொல் லளவைக் கென்னா நிமிராது"

ஆதலால், பல துன்பங்களுக்கிடமாகிய பசிப் பிணியை




மணிமேகலை பாத்திரம் பெறுதல்.

ஒழிப்பாயாக. முன்பு ஒரு காலத்தில் பெரும் பஞ்சம் நேரிட விசுவாமித்திர முனிவரும் நாயின் மாமிசத்தைத் தின்ன முயன்றனரன்றோ! அவர் தாம் யாது செய்வார்?

"மானங் குலங்கல்வி வண்மை யறிவுடைமை
தானந் தவமுயர்ச்சி தாளாண்மை—* * *
* * * * * காமுறுதல் பத்தும்
பசிவந் திடப் பறந்து போம்"

என்பது பொய்யா மொழியன்றோ! பசியால் வருந்து வோர்க்கு உணவு கொடுத்தோர் அவர்களுக்கு உயிர் கொடுத்தவராவார். ஆதலால் நீ இத்தருமத்தை யேற்றுக் கொள்" என்றனள்.

அப்போது மணிமேகலை, "பசிப்பிணியால் வருந்தி மழை யென்றும் வெயிலென்றும் பாராமல், அலைந்து திரியும் எளியவர்களுக்கு நான் அன்னம் பரிமாறுவேன். அப்போது இதிலிருந்து அன்னம் பெருகுவதைக் கண்டு களிப்படைவேன்" என மொழிந்து தீவதிலகையிடம் விடைபெற்றுக் கொண்டு ஆகாய மார்க்கமாய்த் தனதிருப் பிட மணுகினள். அங்கே அவள் தன்னைக் காணாது வருந் திக் கிடக்கும் மாதவியையும் சுதமதியையும் கண்டு, அவர் கள் முற்பிறப்பை யவர்களுக்கு அறிவித்துத் தனக்குக் கிடைத்த அப்பாத்திரத்தின் சிறப்பையும் எடுத்துக் கூறி, அவர்களை யழைத்துக்கொண்டு அறவணவடிகளைக் கண்டு வணங்கப் புறப்பட்டனள்.

---

## 12. மணிமேகலை முதலானோர் அறவணவடிகளைத் தொழுதல்

பின்பு மணிமேகலை, மாதவி, சுதமதி என்னு மூவரும் அறவணவடிகளைக் கண்டு வணங்கினர். அப்போது மணி மேகலை அவரை நோக்கி, "தபோநிதியே! நான் என்

தாயாகிய மாதவியின் அனுமதிப்படி மலர் கொய்ய உப வனத்திற்குச் சென்றேன். அங்கே உதயகுமரன் என்னைக் கண்டு காதலித்தனன். அத்தருணம் மணிமேகலா தெய்வம் என்னை மணி பல்லவத்தில் கொண்டு போய்ச் சேர்த்தது. அங்கே நான் ஸ்ரீபுத்ததேவனது பாத பீடத்தைக் கண்டு தொழுது என் முற்பிறப்பின் வரலாற்றை யுணர்ந்தேன். பின்பு மணிமேகலா தெய்வம் எனக்கு * மூன்று மந்திரங் களை உபதேசித்து மாதவி, சுதமதி என்னும் இருவர் வர லாற்றையும் நின்பால் கேட்டறியும்படி கூறினள். அத்தெய் வம் மறைந்த உடனே தீவதிலகை யென்னும் மற்றொரு தெய்வம் தோன்றி, என்னைக் கோமுகிப் பொய்கைக் கழைத்துச் சென்று ஆபுத்திரன் பாத்திரத்தை யளித்து அந்த ஆபுத்திரன் வரலாற்றையும் நின்னிடமே தெரிந்து கொள்ளும்படி சொல்லிப் போயினள்.' என்றாள். அவற்றை யெல்லாம் செவியுற்ற அறவணவடிகள் அவளை யன்புடன் நோக்கி, "பெண்ணருங்கலமே! கேட்பாயாக. நான் சில வருஷங்களுக்கு முன் பாதபங்கய மலையைத் தரிசிக்கச் சென்றேன். அப்போது குச்சய நகரத்திற் கிறைவனாகிய துச்சயனென்னும் மன்னவனை ஒரு சோலையில் கண்டு, 'மன்னர் மன்ன! நீயும் நின் மனைவிமாரும் சுகமா?' என வினவினேன். அப்போதவன் பெரிதும் வருந்தி, 'முப்பகை வென்ற முனிவனே! என் மனைவியாகிய வீரை என்பவள் மதுவையுண்ட மயக்கத்தால் ஒரு மதக்களிற் றின் முன் ஓடினள். அது அவளைக் கொன்று விட்டது. அதனைக் கேட்ட தாரை தன் உடன் பிறந்தாள் பிரிவிற் காற்றாமல் ஒருயர்ந்த மாளிகையின் மேலேறிக் கீழே

---

* இம்மூன்று மந்திரங்களையும் 38 ம்-பக்கம் பார்க்க.

விழுந்து உயிர் துறந்தனள்' என மொழிந்து விம்மி விம்மி யழுதான். அப்போது நான்,

"ஆடகச் சொம்பொற் கிண்ணத் தேந்திய வலங்கல் தெண்ணீர்
கூடகங் கொண்ட வாழ்நாள் உலந்ததேல் கொல்லும்; பௌவத்(து)
ஊடகம் புக்கு முந்நீ ரழுந்தினு முய்வர்; நல்லார்
பாடகம் போலச் சூழ்ந்த பழவினைப் பயத்தி னென்றான்."

எனக் கல்வி யறிவுடையோர் கூறியபடி, இது பழவினைப் பயனால் நேர்ந்த தாகும், இதைக் குறித்து வருந்தாதே; என வியம்பி அவனைத் தேற்றினேன். அவ்வா றிறந்த அவர்க ளிருவரும் இப்போது கூத்தாடிகளைப் போல் மாதவி, சுதமதி என வேறு வேடம் பூண்டு இங்கு வந்தனர். இது நிற்க, இவ்வுலகத்தில் பௌத்த தருமங்கள் குன்றிப் போயின. அதனை நிலை நிறுத்தப் புத்த தேவன் தோன்றுவான். அப்போது எல்லா உயிர்களும் பலவித இன்பங்களை யடையும். சிலநாள் கழிந்த பின் உனக்குத் தருமோபதேசஞ் செய்வேன். இவர்களிருவரும் முன்பு புத்த தேவனது ஸ்ரீ பாதபங்கய மலையைத் தொழுத பயனால் அப்புத்த தேவனையே வழிபட்டு நிருவாணமடைவார்." எனச் சொல்லி முடித்தனர்.

---

## 13. ஆபுத்திரன் வரலாற்றை அறவணவடிகள் கூறுதல்

பின்பு அறவணவடிகள் மணிமேகலையை நோக்கி, "தவவொழுக்கம் பூண்ட தாழ் குழலாய்! இனி ஆபுத்திரன் வரலாற்றைக் கூறுகிறேன்; கேட்பாயாக. முன்பு வாரணாசி யென்னும் ஊரில் அபஞ்சிகனென்னும் ஒரு வேதியனிருந்தான். அவன் மனைவி சாலி யென்பவள் தீய வழியில் ஒழுகிக் கருப்பமடைந்தனள். பின்பு அவள்

தன் இத்தொழிலால் உண்டாகிய பாவத்தைத் தொலைத்துக்கொள்ள விரும்பிக் கன்னியாகுமரியில் நீராடப் போனாள். அவள் அன்று நள்ளிருளில் நடுவழியிலேயே ஓராண்மகவைப் பெற்றுச் சிறிதும் இரக்கம் பாராட்டாமல் அதனை ஒரு சோலையில் தனியே வைத்துச் சென்றனள். பசியின் கொடுமையால் அக்குழந்தை அழத் தொடங்கியது. அப்போது ஒரு பசு அங்கே வந்து அவ்விள மகவைத் தன் நாவால் நக்கி, தனது இனிய பாலையூட்டி ஏழு நாளளவும் வளர்த்து வந்தது. அதனால், அக்குழந்தைக்கு ஆபுத்திரனென்னும் பெயர் உண்டாயிற்று. பின்பு அக்குழந்தையைப் பூதி யென்னும் மறையவன் கண்டு, மிக்க அன்புடனெடுத்துத் தன் மனைவி கையில் கொடுத்தனன். அவள் அதை மிக்க பரிவாய் வளர்த்து வந்தாள். அக்குழந்தை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து, பல கலைகளை நன்கு பயின்று அவைகளில் மிகவும் வல்லவனானான்.

ஒரு நாள் அச்சிறுவன் ஒரு வேதியன் வீட்டிற்குச் சென்றான். அங்கே கொம்பில் கட்டிய மலர் மாலையுடன் ஒரு பசு கட்டப் பட்டிருந்தது. அதனைக் கொன்று யாகமியற்ற அங்குள்ள வேதியர் கருதி யிருந்தனர். அதனால் அப்பசு தனது கண்களில்நீர் தாரை தாரையாய்ப்பெருகக் கதறிக் கொண்டிருந்தது. அதனை ஆபுத்திரன் கண்டு மனம் பொறுமல் மிகவும் வருந்தி, "ஐயோ! வாயற்ற பிராணியாகிய இப்பசு யாருக்கு என்ன தீங்கு செய்தது? இதை அநியாயமாய்க் கொலை புரியக் கருதி யிருக்கின்றனரே! நான் இன்று நடு நிசியில் இவர்களொருவரும் அறியாவண்ணம் இதனைக் கவர்ந்து செல்வேன்." என நினைத்து அன்றிரவு அவ்வாறே செய்தான். அவன் அவ்

லூரை விட்டுச் சிறிது தூரஞ் சென்றதும், அங்குள்ள பார்ப்பனர் அப்பசுவைத் தேடிச் சென்றனர். அவர்கள் அச்சிறுவனைப் பசுவுடன் பிடித்துக் கொண்டு, அவனைப் பலவாறு துன்புறுத்தலாயினர். அப்போது அப்பசு அவனை வருத்திய உபாத்தியாயன் மேல் பாய்ந்து தன் கொம்பால் குத்திற்று. ஐயோ பாவம்! அவன் வயிற்றிலுள்ள குடல் வெளியே சரிந்துவிட்டது. பின்பு அது கடுவேகமாய் ஓடிக் காட்டில் நுழைந்து தப்பித்துக் கொண்டது.

ஆப்பால், ஆபுத்திரன் மீண்டுந் தன்னை வருத்தத் தொடங்கிய வேதியரை நோக்கி, "முதுமறை யந்தணரே! என்னை வீணாய் வருத்தாதீர். நான் சொல்வதைக் கேளுங்கள். பசு பூமியில் முளைத்த புல்லை மேய்ந்து தனது இனிய பாலை உலகத்திலுள்ள மனிதர்களுக்கு மிக்க அருளுடனளித்து உதவி புரிகிறதன்றோ! இத்தகைய பசுவினிடம் உங்களுக்கு உண்டாகிய கோபத்திற்குக் காரணமென்ன?" என வினவினான். அப்போது அங்குள்ள பார்ப்பனர்களில் ஒருவன், "நீ நான்முக னருளிய வேத விதியை நன்குணராத சிறுவன். அன்றியும், ஆபுத்திரன் என்பதற்குத் தகுதியானவன். ஆதலால் உனக்குக் கொஞ்சமாயினும் அறிவில்லை." என இகழ்ந்தான். அதற்கு அவ்விளைஞன்,

"ஆன்மகன் அசலன்; மான்மகன் சிருங்கி;
புலிமகன் விரிஞ்சி; புரையோர் போற்றும்
நரிமக னல்லனோ கேச கம்பளன்;
ஈங்கிவர் நுங்குலத்(து) இருடி கணங்களென்(று)
ஓங்குயர் பெருஞ்சிறப் புரைத்தலு முண்டால்;
ஆவொடு வந்த அழிகுல முண்டோ?
நான்மறை மாக்காள்! நன்னூலகத்து"

என வினவினான்.

அப்போது அங்குள்ள வேதியர்களி லொருவன், "இவன் வரலாற்றை நான் நன்கறிவேன்; சொல்கிறேன் கேளுங்கள். நான் சில வருஷங்கட்கு முன்னர் ஒரு பார்ப் பனியைக் கண்ணுற்றேன். வழி நடந்த இளைப்பால் அவள் உடல் வாடியிருந்தது. அவள் பேர் சாலி யென்பது. நான வளைக் கண்டு நீ யாரென வினவ, அவள் "நான் வாரணாசியி லுள்ள அபஞ்சிகனென்னும் வேதியன் மனைவி. நான் தீய வழியி லொழுகினமையால், என் கணவனைப் பிரிந்து கன்னியாகுமரிக்கு நீராடச் சென்றேன். அப்போது பாண்டிய மன்னவன் நகரமாகிய கொற்கைக்குச் சற்றுத் தூரத்திலுள்ள இடையர் சேரியில் ஓராண் மகவைப் பெற் றேன். ஐயோ! சிறிதும் இரக்கமின்றி அவ்விளங் குழந் தையை ஒரு பூஞ்சோலையில் வைத்து வந்தேன். இத் தகைய பாவியாகிய எனக்கு நற்கதி கிடைக்குமோ?" எனப் பெரிதும் வருந்தினாள். அவள் மகனாகிய இவன் இத்தகைய அசுத்த முடையவனாதலால், இவனை ஒருவரும் தொடா திர்கள்" என மொழிந்தான்.

இவற்றை யெல்லாங் கேட்ட ஆபுத்திரன் புன்னகை புரிந்து,

> "மாமறை மாக்கள் வருகுலங் கேண்மோ
> முதுமறை முதல்வன் முன்னர்த் தோன்றிய
> கடவுட் கணிகை காதலஞ் சிறுவர்
> அருமறை முதல்வ ரந்தண ரிருவரும்
> புரிநூன் மார்பீர்! பொய்யுரை யாமோ?
> சாலிக் குண்டோ தவறு"

எனக் கூறி அவர்களைக் கண்டு கலீரென நகைத்தான். இவற்றை யெல்லாங் கேட்டு ஆபுத்திரனை வளர்த்து வந்த பூதியென்பவன், அவனைத் தன் மனைக்கு வரவொட்டாமல்

தடுத்து விட்டான். அவ்வூரிலுள்ள வேதியரெல்லாரும் அவனைப் பசுவைக் கவர்ந்த கள்வனென் றிகழ்ந்து, அவன் பிச்சைப் பாத்திரத்தில் கல்லைப் போட்டனர். ஐயோ பாவம்! அவ்விதத் துன்பங்களைப் பொறுக்க முடியாமல் அவன் தென்மதுரை யடைந்து ஆங்குள்ள சிந்தாவிளக் கென்னும் சரஸ்வதி தேவியின் கோயிலிலுள்ள அம்பலப் பீடிகையில் தங்கினன். பின்பு அவன் தன் கையிலுள்ள பிச்சைப் பாத்திரத்தால் வீடுகள்தோறும் சென்று இரந்து கொண்டு வந்த சோற்றைக் குருடர், செவிடர், முடவர், திக்கற்றவர், நோயாளிகள் முதலிய பல எளியவர்க் களித்து மிகுந்ததைத் தானுண்பான். இரவில் அப்பாத்தி ரத்தையே தலையணையாகக் கொண்டு உறங்குவான்.

---

## 14. அறவணவடிகள் அமுதசுரபியின் வரலாறு கூறுதல்

பின்பு அறவணவடிகள் மணிமேகலையை நோக்கி, "பூங் கொடி போல்வாய்! இனி அந்தப் பாத்திரம் ஆபுத்திர னுக்குக் கிடைத்த விதத்தைச் சொல்கிறேன் கேள். முன் சொன்னபடி ஆபுத்திரன் சரஸ்வதி தேவியின் அம்பலப் பீடிகையில் காலங் கழித்து வந்தான். ஒருநாள் நள்ளிரு ளில், ஆகாயத்தில் மேகங்கள் நிரம்பி மழை பெய்துகொண் டிருந்தது. அப்போது சிலர் அங்குச் சென்று அவனைத் தூக்கத்தினின்று மெழுப்பி, "வள்ளலே! நாங்கள் பசிப் பிணியால் மிகவும் மெலிவடைந்தோம். எங்களுக்கு ஏதா வது உணவு கொடுத்து எங்களை யாதரியும்." என அவனை யிரந்தனர். அப்போதவன், "ஐயோ! இதற்கு நான் யாது செய்வேன்? இந்நள்ளிருளில் இவர்களுக்கு உதவ என்னிடம் ஒன்று மில்லையே." எனப் பெரிதும் வருந்தி னன். அத்தருணம் அக்கோயிலிலுள்ள சிந்தாவிளக் கென்

னும் தெய்வம் தோன்றி அவனிடம் ஒரு பாத்திரமளித்து, அவனை நோக்கி, "அன்பனே! நீ சிறிதும் வருந்தாதே. எளியவர்களுக்கு நீ கொடுக்குந்தோறும் இப்பாத்திரத்தில் அன்னம் வளர்ந்துகொண்டே வரும்." என்று சொல்லி மறைந்து போயிற்று. பின்பு அவன் அப்பாத்திரத்தைக் கொண்டு அன்றிரவு தன்னை யடைந்த எளியவர்களுக்கு அன்னமிட்டான். அன்று முதல் அவன் வறிய மனிதரை மாத்திரமன்றி உணவின்றி வருந்தும் விலங்குகள், பறவைகள் முதலியவற்றையும் அன்புடன் ஆதரித்து வந்தான்.

அவன் கொடையின் சிறப்புத் தேவேந்திரனுக்குத் தெரிந்தது. உடனே அவன் வளைந்த உடம்பும் தளர்ந்த நடையு முடைய ஒரு கிழவேதியனுய் ஆபுத்திரனை யடைந்து, "நான் தேவேந்திரன். நீ எளியவர்க்குச் செய்யும் தருமத்தைக் கண்டு களிப்படைந்தேன். அதன் பயனை இப்பொழுதே பெற்றுக் கொள்" என்ருன். அதற்கவன் கலீரென நகைத்து, 'நான் இங்குப் பசியால் வருந்தி வந்தவர்களுடைய துன்பத்தை யொழித்து அவர்களுடைய முகமலர்ச்சியைக் கண்டு களிப்படைகிறேன். அவ்வாறு செய்விக்கும் என் தெய்வப் பாத்திரம் ஒன்றே போதும்; நீ கொடுக்கும் வரம் இதைவிட உயர்ந்ததாகாது." எனவியம்பி அவனை யிகழ்ந்தனன்.

பின்பு தேவேந்திரன் பெருங்கோபமடைந்து, ஆபுத்திரன் தருமத்தை யழிக்கக் கருதி நாடெங்கும் பருவம் தவருது மழை பெய்வித்தனன். அதனுல் பயிர் பச்சைகள் தழைத்தோங்கின. அந்நாட்டின் வறுமை யடியோடே தொலைந்து போயிற்று. அதனுல் அவனிடம் இரக்க வருவோர் ஒருவரும் இல்லாமல் போயினர். பின்பு அவன் வேற்றூர்களுக்குச் சென்று "எளியவர் யாரேனு

முண்டோ?" என விசாரிக்கத் தொடங்கினன். அங்குள்ளா ரனைவரும் தமது செல்வச் செருக்கால் அவனை அவமதிக்கலாயினர். அதனால் அவன் மிக்க வருத்தத்துடன் அப்புறம் சென்றான்.

அப்போது கப்பலில் வந்த சிலர் அவனை நோக்கி, "அருளிற் சிறந்தவனே! சாவக நாட்டில் மழை பெய்யாமையால், அங்கே பெரும் பஞ்சம் தோன்றி யிருக்கிறது. பட்டினியால் பலர் உயிர் துறந்தனர்." என மொழிந்தனர். அதைக் கேட்டு அவன் அங்குச் செல்லக் கருதி மிக்க களிப்புடன் அக்கப்பலிலேறினன். அக்கப்பல் காற்றினுங் கடிது சென்று மணிபல்லவத்தில் ஒருநாள் தங்க, அவன் அதிலிருந்து இறங்கினன். பின்பு அக்கப்பல் மாலுமி, அங்கு இறங்கிய ஆபுத்திரன் ஏறிவிட்டதாய்க் கருதி அன்றிரவு நள்ளிருளில் அதைச் செலுத்தத் தொடங்கினான்.

ஆபுத்திரன் அதைக் கண்டு பெருந்துயரமடைந்து, "ஐயோ! இனி யான் யாது செய்வேன்? சாவகநாட்டிற்குச் செல்லும் மரக்கலம் போய் விட்டதே! இம்மணிபல்லவத்தில் அன்னம் பெறுவோர் ஒருவரையுங் காணேன். பலவறிஞரைப் பாதுகாக்கும் இப்பாத்திரத்தைக் கொண்டு என் ஒருவனுயிரை மட்டும் நான் பாதுகாத்துக் கொள்ளேன். இப்பாத்திரத்தை இக்கோமுகிப் பொய்கையில் எறிவேன். இது வருடத்திற் கொருமுறை வெளிப்பட்டுக் கருணையும் தருமமும் உடையவராய்ப் பலவுயிர்களைப் பாதுகாக்கும் புண்ணிய சீலர்கள் எவரோ அவர் கையில் சேர்வதாக." எனக் கூறி அதனை அப்பொய்கையிலெறிந்து தானும் உயிர் துறக்கக் கருதிப் பட்டினி கிடந்தான். அத்தருணம் நானவனைக் கண்டு, 'உனக்கு நேர்ந்த துன்பம் யாது?' என வினவினேன். அவன் தன் துன்

பங்க ளெல்லாவற்றையும் சொல்லித் தனதுடலை மணிபல்ல வத்தில் போட்டுவிட்டு, எல்லா உயிர்களையுங் காப்பாற்றுங் கருத்துடன் சாவக நாட்டையாளும் வேந்தனது பசுவின் வயிற்றில் உதித்தனன்.

---

## 15. மணிமேகலை பிச்சை எடுக்கப் போதல்

பின்பு அறவணவடிகள் மணிமேகலையை நோக்கி மேலும் சொல்லத் தொடங்கினர்: "இளங்கொடி போல்வாய்! ஆபுத்திரனைச் சாலியென்பவள் பெற்று ஒரு நந்தவனத்தில் வைத்து விட்டுப் போக, அவனை ஒரு பசு ஏழு நாளளவும் ஆதரித்து வந்ததென முன்பு மொழிந்தேனல்லவா? அப்பசு சாவக நாட்டில் தவள மலையிலுள்ள மண்முகனென்னும் முனிவனிடம் மீண்டும் பசுவாய்த் தோன்றித் தனதிளமை முதல் பால் சுரந்து பல வுயிர்களைப் பாதுகாத்து வந்தது. அவ்வதிசயத்தைக் கண்ட அம்முனிவன், "இப்பசுவின் வயிற்றில் பொன் மயமான முட்டையொன்று உண்டாகும். அதிலிருந்து ஒருயர்ந்த புருஷன் தோன்றுவான். அவன் உலகத்திலுள்ள உயிர்களெல்லாவற்றையும் இனிது காப்பான்." என மொழிந்தனன். பின்பு ஆபுத்திரன் அம்முனிவன் மொழிந்தவாறே அதன் வயிற்றிலுதித்தான். அப்போது பல நன்னிமித்தங்களுண்டாயின. சக்கரவாளக் கோட்டத்திலுள்ள முனிவர்கள் அவற்றைக் கண்டு, "புத்த முனிவர் தோன்றிய காலத்தே நிகழ்ந்த நன்னிமித்தங்கள் இப்போது உண்டாகக் காரணமென்ன?" என வியந்து, அதனை யறிய விரும்பி அன்று நள்ளிருளில் கந்திற் பாவையை யணுகி

வினவினர். அப்பாவை அவர்களை யென்னிடமனுப்ப, நான் இவ்வரலாறனைத்தும் அவர்களுக்கு எடுத்துக் கூறினேன்.

இஃதிவ்வாறாக, அப்பசுவின் வயிற்றிலுதித்த ஆபுத்திரனை மண்முகனென்னும் முனிவன் வளர்த்து வந்தான். அம்முனிவன் வசித்த சாவக நாட்டைப் பூமிசந்திரனென்னும் வேந்தனொருவன் அரசாட்சி செய்து வந்தான். அவனுக்கு மகப்பேறின்மையால், அவன் மண்முகமுனிவனை வணங்கி அக்குழந்தையைத் தனக்களிக்குமாறு வேண்டினன். அவன் அவ்வாறே யளிக்க, அம்மன்னவன் அதனை மிக்க மகிழ்ச்சியோடு பெற்றுச் சென்று அன்பாய் வளர்த்து வந்தான். அச்சிறுவனே இப்போது அந்நாட்டிற்கு வேந்தனாய் விளங்குகிறான். இதுநிற்க, காவிரி நதி வற்றாமல் பாயும் இந்நாட்டில் யாது காரணத்தாலோ பஞ்சம் மேலிட்டு விட்டது. இத்தருணம் உன்னிடமிருக்கும் அமுதசுரபியை நீ சும்மா வைத்திருத்தல் தகாது." எனக் கூறினர்.

உடனே மாதவி சுதமதி யென்னு மிருவருடன், மணிமேகலை அவரை வணங்கித் துதித்தனள். பின்பு அவள் அங்கு நின்று மகன்று பிக்ஷுணி கோலத்துடன் அப்பாத்திரத்தைக் கையிலேந்திக் கொண்டு வீடு வீடாய் இரக்கப் புறப்பட்டாள். அப்போது அவளைக் கண்டோரனைவரும், 'ஆகா! இதுவென்ன அதிசயம்! உதயகுமார மன்னவன் உள்ளத்தைத் தன்வசமாகக் கவர்ந்த மணிமேகலை பிச்சைப் பாத்திரத்தைக் கையிலேந்தித் தெருத் தெருவாய்த் திரிகின்றனளே!' என மிகவும் வருந்தினர். பின்பு மணிமேகலை, 'பத்தினிப் பெண்கள் இடும் பிச்சையை முதலில் பெறுதல் தகுதி' என்றனள். அப்போது அவளுடனிருந்த காயசண்டிகை யென்பவள்

மணிமேகலையை நோக்கி, "நல்லொழுக்க முடைய நங்காய்! இது ஆதிரை என்பவள் வீடாம். அவள் கற்பிலருந்ததியை யொத்தவள்.

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை"

என்றபடி, அவள் பெய்யென்றால் மழைபெய்யும். ஆதலால், நீ முதல் முதல் அவள் வீட்டில் நுழை" என்றனள்.

---

## 16. மணிமேகலைக்கு ஆதிரை பிச்சையிடல்

மணிமேகலை அதற்குச் சம்மதித்து ஆதிரை மனைக்குப் போகப் புறப்பட்டாள். அப்போது அவளுடன் சென்ற காயசண்டிகை அவளை நோக்கி, "பெண் பாவாய்! இவ்வாதிரை வரலாற்றைக் கூறுகிறேன்; கவனமாய்க் கேள்: இந்த ஆதிரையைச் சாதுவனென்னும் வணிகனொருவன் மணஞ் செய்து கொண்டனன். அவன் அவளை விட்டுப் பிரிந்து ஒரு விலை மாதினிடம் அதிக அன்பு பாராட்டி வந்தான். அவன் தன் பொருளெல்லாவற்றையும் அந்தக் கணிகைக்கும் சூது, வட்டு முதலிய தீய விஷயங்களுக்கும் பயன் படுத்தினான். அவனிட மிருந்த திரண்ட செல்வம் சிலநாளில் தொலைந்து போயிற்று. பின்பு அக்கணிகை அவனை விலக்கி விட்டாள். மீண்டும் அவன் பொருள் சேர்க்க வெண்ணி, சில வணிகருடன் சேர்ந்து கப்பலேறி வேற்றூருக்குப் போனான். நடுவழியில் அக்கப்பல் காற்றின் கொடுமையால் கவிழ்ந்து போயிற்று. அப்போதவன் ஒடிந்து போன பாய்மரத் துண்டைப் பிடித்துக் கொண்டு கடலில் மிதந்துகொண்டிருந்தான். பின்பு அலைகளின் உதவியால் ஆடையின்

றித் திரிபவராகிய நாகரென்னும் ஒரு வகுப்பார் சஞ்சரிக்கும் ஒரு மலையை யடைந்தான்.

இஃதிவ்வாறாக, அக்கப்பலிலிருந்து தப்பிப் பிழைத்தோர் சிலர் காவிரிப்பூம்பட்டின மடைந்து ஆதிரையை நோக்கி, "கப்பலில் அகப்பட்டு இறந்தவர்களுடன் உன் கணவனும் மாண்டான்" என விசைத்தனர். அவள் அக்கடுமொழி கேட்டுப் பெரிதும் வருந்தி, மயானத்தில் எரி மூட்டுவித்து, "என் கணவன் புகுந்த விடத்தை நானும் போயடைவேன்" எனக்கூறி அத்தீயில் பாய்ந்தனள். ஆகா! என்ன ஆச்சரியம்!! அவள் உடுத்த கூறையில் சிறிதேனும் தீப்பற்றவில்லை; அவள் உடம்பில் பூசிய சந்தனம் சிறிதும் நிறம் மாறவில்லை; அவள் கூந்தலில் முடித்த மலர்கள் கொஞ்சமும் கருகவில்லை. செந்தாமரை மலரினிடையில் விளங்கும் திருமகள் போல் அவள் அத்தீயின் நடுவில் விளங்கினாள். பின்பு அவள், "ஐயோ! பாவியாகிய யான் இனி யாது செய்வேன்? இப்பாழும் நெருப்பும் என்னைக் கொல்ல வில்லையே!" என்றேங்கினாள். அப்போது, "கற்புக்கரசியே! நீ சிறிதுங் கலங்காதே! உன் நாயகன் மரிக்கவில்லை, அவன் மிக்க விரைவில் உன்னை யடைவான்." என ஓர் அசரீரிக் குரல் தோன்றிற்று.

பின்பு அவள் தனதிருப்பிடமணுகித் தன்கொழுநன் வரவை மிக்க ஆவலுடன் எதிர்நோக்கி, அவன் விரைவில் வந்து சேருதற்குரிய புண்ணிய காரியங்களைப் புரிந்து கொண்டிருந்தாள்.

இது நிற்க, இனிச் சாதுவன் செய்தியைக் கேள். அவன் நாகர்கள் வசிக்கும் மலையை யணுகி, அங்கே ஒரு மரநிழலில் தூங்கிக் கொண்டிருந்தான். நாகர்கள் அவனைத் தின்னக் கருதி யெழுப்பினர். அவன் அவர்கள் பாஷையை

நன்கு கற்றிருந்ததால் அவர்களோடு பேசினான். அவ்வதிசயத்தைக் கண்டு அவர்கள் தமது தலைவனாகிய குருமகனிடம் அவனை அழைத்துப் போயினர். அவ்வணிகன் அக்குருமகனைக் கண்டு பேசி, அவனையும் தன் வசமாக்கிக் கொண்டான். பின்பு அக்குருமகன், "நீ இங்கு வரக் காரணமென்ன?" என, அவன் தனக்கு நேர்ந்த துன்பங்களெல்லாவற்றையும் சொன்னான். உடனே அவன் தன்னண்டையிலுள்ளவரை நோக்கி, "இவனுக்கு வேண்டியவளவு கள்ளையும் இறைச்சியையுங் கொடுத்துப் பின் இளையவளாகிய ஒரு பெண்ணையும் மணஞ்செய்து கொடுங்கள்" என்றான். அப்போது சாதுவன் அவற்றை அடியோடு மறுத்தான். அதற்கு அக்குருமகன் "பெண்டிரும் உண்டியுமன்றி மனிதர்களுக்கு இன்பந்தருவன வேறு யாவை? சொல்வாய்" எனச் சாதுவனைக் கோபத்துடன் கேட்டான். அதற்குச் சாதுவன்,

" மயக்கும் கள்ளும் மன்னுயிர் கோறலும்
கயக்கறு மாக்கள் கடிந்தனர் ; கேளாய்,
பிறந்தவர் சாதலும், இறந்தவர் பிறத்தலும்,
உறலுங்கம் விழித்தலும் போன்ற தன்மையின்,
நல்லறஞ் செய்வோர் நல்லுல கடைதலும்,
அல்லறஞ் செய்வோர் அருநா கடைதலும்,
உண்டென வுணர்தலின் உரவோர் களைந்தனர்."

என்றான். அதன்மேல் சாதுவனுக்கும் அவனுக்கும் பெரிய விவாதமுண்டாயிற்று. அவன் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் சாதுவன் ஏற்றவிடையளித்து அவனை நல்வழிப்படுத்தினான். அன்று முதல் அக்குரு மகன் உயிர்க்கொலை புரிதல், பிறர்க்குக் கேடுசூழ்தல் முதலிய தீய விஷயங்களைத் துறந்து விட்டான். பின்பு அவன் தான் அது காறும்

கொன்று கவர்ந்த மனிதர்களுடைய பொருள்களையும் அகில், சந்தனம், துகில் முதலியவற்றையும் சாதுவனுக்குப் பரிசாக அளித்தான். அவன் அவற்றைப் பெற்றுக் கொண்டு அங்கு நின்று புறப்பட்ட கப்பலிலேறித் தனது மனைவியிடம் வந்து சேர்ந்து பற்பல தானங்கள் செய்தான். இப்படிப்பட்ட மேன்மையுடைய ஆதிரையின் பால் நீ முதலில் பிச்சை பெறுக" என மொழிந்தனள்.

பின்பு மணிமேகலை அவ்வாறே ஆதிரை வீட்டிற்குச் சென்று, மௌனமாய் நின்றாள். உடனே ஆதிரை அவள் கையிலுள்ள பாத்திரத்தில் அன்னமிட்டாள்.

---

## 17. மணிமேகலை *உலகவறவியில் புகுதல்

பின்பு மணிமேகலை அவ்வன்னத்தைப் பல எளியவர்களுக்கு வழங்கினள். நல்ல வழியில் தேடிய பொருளைச் சான்றோர்க்கு வழங்குவதால் வளர்ந்தோங்கும் நல்வினைப் பயன் போல், அவள் எளியவர்களுக்குக் கொடுக்குந்தோறும் அப்பாத்திரத்திலுள்ள அன்னம் பெருகிக் கொண்டே வந்தது. அது கண்ட காயசண்டிகை அவளை வணங்கி "தாயே! யானைத்தீ என்னும் கொடிய நோய் என்னை வருத்துகிறது. நான் எவ்வளவு உணவு உண்ட போதிலும் என் பசி தணிவதில்லை. அஃதொழியுமாறு எனக்கும் சிறிது உணவளிக்க வேண்டும்" என்று தொழுதனள். உடனே மணிமேகலை தன் கையிலுள்ள பாத்திரத்திலிருந்து ஒருபிடி சாதமெடுத்து அவளுக்கும் கொடுத்

* உலகவறவி—ஊரார் தங்கும் பொதுவிடம்; இது காவிரிப் பூம்பட்டினத்தில் சக்கரவாளக் கோட்டத்திலுள்ள சம்பாபதிக் கோயிலின் முன்புறத்தி லுள்ளது.

தாள். அதனை யுண்டதும், அவள் தன் பசிநோய் நீங்கிக் குணமடைந்தாள்.

பின்பு காயசண்டிகை மணிமேகலையை நோக்கி, "தாயினுமினியாய்! நான் வடதிசையிலுள்ள வித்தியாதரருலகத்தில் காஞ்சனபுர மென்னும் நகரத்திலிருந்தேன். ஒருமுறை பொதியமலையிலுள்ள காட்சிகளைக் கண்டு களிக்க வெண்ணி நான் என் கணவனுடன் புறப்பட்டு வந்து நடு வழியிலுள்ள ஒரு காட்டாற்றங் கரையில் தங்கினேன். அங்கே விருச்சிகனென்னும் ஒரு முனிவர் ஒரு நாவற் பழத்தைக் கொண்டு வந்து ஓரிலையில் வைத்து நீராடச் சென்றனர். அந்நாவற்கனி பனம்பழத்தைப்போல் பருத்திருந்தது. அம்முனிவர் போனதும், நான் மிக்க செருக்குடன் அங்குச் சென்று அப்பழத்தை என் காலால் மிதித்துச் சிதைத்தேன். அதனைக் கண்ட அம்முனிவர் பெருஞ் சீற்றமுற்று, இக்கனி பன்னிரண்டு வருஷத்திற்கு ஒரு முறைதான் உண்டாகும். நான் இதனை யுண்டு மீண்டும் பன்னிரண்டு வருஷமளவும் பசிப்பிணியின்றிப் பட்டினி கிடப்பேன். அத்தகைய தெய்வத் தன்மை வாய்ந்த இக் கனியை நீ வீணாய்ச் சிதைத்தனை. ஆதலால், நீயும் என்னைப் போலவே இன்று முதல் பன்னிரண்டு வருஷமளவும் யானைத்தீ யென்னும் பசிநோயால் வருந்துவாயாக." எனச் சபித்தனர்.

அன்று முதல் யான் இக்கொடிய நோயால் துன்பமடையலானேன். அதனை யொழிக்க என் கணவன் எவ்வளவோ முயன்றனன். அது சிறிதும் பயன்படவில்லை. ஆகாயத்தில் செல்லுதற்குரிய மந்திரத்தையும் அப்போது மறந்து விட்டேன். பின்பு என் கணவன் மிகவும் வருத்தமுற்று, "பெருஞ்செல்வர்கள் வாழும் காவிரிப்பூம் பட்

டினத்திற்குச் செல்; அங்கே உன் பசிக்கேற்ற உணவு ஒருவாறு கிடைக்கும்" என்று சொல்லிப் போனன். நான் அவன் கட்டளையின்படி மிக்க வருத்தத்துடன் இங்கு வந்து சேர்ந்தேன். வருஷந்தோறும் இந்திரவிழா நடக்கும் போதெல்லாம் அவன் இங்கு வந்து என்னைக் கண்டு வருத்தத்துடன் செல்வான். இன்று உன் கருணையால் என் துன்பம் தொலைந்தது. இந்நகரத்திலுள்ள சக்கரவாளக் கோட்டத்தில் உலகவறவி யென்னும் அம்பலமொன்றுண்டு. அங்கே பல எளியவர்களும், பிணியாளர்களும், திக்கில்லாதவர்களும் நிரம்பி யிருப்பார். நீ அங்கே செல்" எனக் கூறி, அவள் ஆகாய மார்க்கமாய்ப் போய் விட்டாள்.

பின்பு மணிமேகலை அங்குச் சென்று சம்பாபதியையும், கந்திற் பாவையையும் வணங்கி அங்குள்ள வறியவரனைவர்க்கும் அன்னம் வழங்கி, அவர்களை அன்புடன் ஆதரித்து வந்தாள்.

---

## 18. உதயகுமரன் அம்பலம் புகுதல்

மணிமேகலை தவப்பெண் கோலத்துடன் பிச்சைப் பாத்திரம் கையிலேந்தி உலகவறவியில் தருமஞ் செய்வதைச் சித்திராபதி செவியுற்றனள். உடனே அவள் மனம் வெறும்பித் தன்னுட னிருந்த கணிகையரை நோக்கி, "தோழிகளே! கோவலன் இறந்ததைக் கேட்ட மாதவி மிக்க வருத்த முற்றுத் தவக்கோலந் தாங்கினள். இதைக் கண்ட ஊராரெல்லாம் நகைக்கின்றனர். கணவனிறந்ததைக் கேட்டவுடனே தீப்பாய்ந்து உயிர் துறக்கும் பத்தினிப் பெண்களைப்போல் நாம் உத்தம குடியில் பிறக்கவில்லை. ஒரு மலரில் தேனுள்ள வரையிலும் அதனைப் பருகிப் பின்பு அம்மலரைத் துறக்கும் வண்டுகள் போல்,

ஒருவனிடம் பொருளுள்ள வரையில் அவனைத் தழுவி நின்று பின்பு நாம் அவனைத் துறந்து விடுவோம். ஆதலால், மணிமேகலையை அவள் தொழிலிலிருந்து விலக்கி உதயகுமானுக்கு உரிமை யாக்குவேன்" எனச் சபதங் கூறிச் சில பெண்கள் தன்னைச் சூழ அம்மன்னவன் மாளிகை யடைந்தாள்.

பின்பு அவள் அவனைக் கண்டு வணங்கி மணிமேகலை உலகவறவியில் வந்திருப்பதை யுணர்த்தினள். அதற்கவன், "நான் மணிமேகலையை உபவனத்திற் கண்டு மிகவும் காதலித்தது உண்மையே. ஆனால், அன்று நடு நிசியில், பொன் போல் விளங்குந் திருமேனியை யுடைய ஒரு பெண் என் எதிரில் தோன்றிச் செங்கோல் மன்னர்க்குரிய நீதிகள் பலவற்றை யெடுத்துச் சொல்லி, தவவொழுக்கத்தை விரும்பிய மணிமேகலை பால் கொண்ட காதலை மறந்துவிடு என்றனள்" என மொழிந்து அவளைப் பாராட்டினன்.

அதைக் கேட்ட சித்திராபதி அவன் மனத்தைப் பலவாறு கலக்கிப் பின்பு 'விலைமாதர்களையும் தம்மொழுக்கத்தில் தவறாமல் இருத்துதல் செங்கோல் மன்னர்க்குக் கடமையன்றோ?' வென்றனள். உடனே உதயகுமாமன்னவன் மனம் மாறிவிட்டது.

அதனாலவன் அக்கணமே தேரேறி உலகவறவியடைந்து மணிமேகலையைக் கண்டு அவளருகிற் சென்று "நீ இத்தவ வேடந்தாங்கி யாசிக்குந் தொழிலை மேற்கொண்டமைக்குக் காரணமென்ன?" என வினவினன். அதற்கவள், அவன் முற்பிறப்பில் தனக்குக் கணவனென்றெண்ணி அவனை வணங்கி,

“ பிறத்தலும் மூத்தலும் பிணிப்பட் டிரங்கலும்
இறத்தலும் உடைய(து) இடும்பைக் கொள்கலம்
மக்கள் யாக்கை யிதுவென வுணர்ந்து
மிக்க நல்லறம் விரும்புதல் புரிந்தேன்.”

என்று சொல்லி அவனை விட்டுப் பிரிந்து சம்பாபதிக் கோயிலினுள்ளே சென்று அவ்வம்மனை வழிபட்டு நின்றாள். சிறிது நேரங் கழிந்த பின், அவள் மணிமேகலா தெய்வம் முன்பு தனக்கருளிய மந்திரத்தினுதவியால் காயசண்டிகை வடிவமுற்று அமுதசுரபி யென்னும் பாத்திரத்துடன் மீண்டும் வெளியே வந்து நின்றாள். இவ்வுண்மை யறியாத உதயகுமரன் மணிமேகலை அக்கோயிலுக்குள் மறைந்திருப்பதாய்க் கருதினான். அதனாலவன் அங்குச் சென்று சம்பாபதியை வணங்கி, “ தாயே இங்குள்ள பாவைக் கூட்டங்களின் நடுவில் மறைந்திருக்கும் மணிமேகலையை நான் எவ்வாறு அறிவேன்? அவளை விட்டு நான் தனித்துச் செல்லேன். எத்தனை நாளாயினும் நானிங்கேயே வாங்கிடப்பேன்; இதோ உன் திருவடியைத் தொட்டேன்; இதுவே எனக்குள்ள குறை.” என முறையிட்டுக் கொண்டான்.

---

## 19. மணிமேகலை சிறைக்கோட்டத்தை அறக்கோட்ட மாக்குதல்

உதயகுமா மன்னவன் சம்பாபதி தேவியை வணங்கி அவ்வாறு சபதஞ்செய்தான். அதைக் கேட்டதும், அங்குள்ள பாவைகளில் ஒன்று அவனை நோக்கி, “ மலர் மாலையணிந்த மன்னனே! எமது மணிமேகலையின் மேன்மையை ஆராய்ந் தறியாமல் இவ்வாறு கூறினாய். அவள்மேல் கொண்ட காதலை விட்டுவிடு” என்றது. அவன் அதைக்

கேட்டு மனங்கலங்கி, முன்பு மணிமேகலா தெய்வம் தன் கனவில் தோன்றிச் சொன்னதையும், இப்போது அப் பாவை சொன்னதையும் எண்ணிப் பலவாறு வருந்தினான். ஆயினும் அவன் அதை முற்றும் ஆராய்ந்தறியக் கருதி அங்கு நின்று மகன்று தனதரண்மனை யணுகினான். அப்போது சூரியன் மறைந்தான்.

பின்பு மணிமேகலை உதயகுமானுக்கஞ்சி, காய சண்டிகை வடிவத்துடன் எளியவர் பலர்க்கு அன்ன மளித்து ஆதரித்து வந்தாள். இவ்வாறு சில நாள் சென்ற பின், ஒரு நாள் அவள் அந்நகரத்திலுள்ள சிறைச்சாலையை யணுகி அங்குள்ள சிறையாளர் பலர்க்கு உணவளித்தாள். அவள் கொடுக்குந்தோறும் அப்பாத்திரத்திலுள்ள அன் னம் வழக்கம் போல் பெருகிக் கொண்டே வந்தது.

அங்குள்ள சிறைக் காவலர் அதனைக் கண்டு மிகவும் அதிசயித்து, தமது மன்னவனும் உதயகுமான் தந்தையு மாகிய நெடுமுடிக்கிள்ளி யென்பவனுக்கு அதனை அறிவிக் கச் சென்றனர். அப்போது அக்காவலன் இராசமாதேவி என்னும் தனது மனைவியுடன் ஒரு பூஞ்சோலையில் புகுந்து அங்குள்ள காட்சிகள் பலவற்றைக் கண்டு களித்துக் கொண் டிருந்தான். பின்பு அவன் அங்கிருந்து புறப்பட்டுச் சென்று தனது மனைவியுடன் ஓரழகிய மண்டபத்தில் உட் கார்ந்தான். அத்தருணம் சிறைக்காவலர் சென்று அப் பார்த்திபனை வணங்கி, "மன்னர் மன்ன! காயசண்டிகை யென்னும் காரிகை யொருத்தி நமது நகரில் திரிந்துகொண் டிருந்தாள். யானைத்தீ யென்னும் கொடிய நோய் அவளை வருத்திக் கொண்டிருந்தது. இப்போது அவள் ஒரு பிச் சைப் பாத்திரத்தைக் கையிலேந்தி நின்னை வாழ்த்தி நமது சிறைக் கோட்டத்தி லுள்ளவ ரனைவர்க்கும் உணவளித்

தாள். அவள் கொடுக்குந் தோறும் அப்பாத்திரத்தில் அன்னம் பெருகிக்கொண்டே இருக்கிறது. இந்த அதிசயத்தை உமக்குத் தெரிவிக்க வந்தோம்" என்றனர்.

அதைக் கேட்ட நெடுமுடிக்கிள்ளி வேந்தன் "அப்பெண்மணியை இங்கே அழைத்துவாருங்கள்" என்றான். பின்பு அவர்கள் அவ்வாறே அவளை யழைத்துச் சென்று அம்மன்னவன் முன்னிலையில் விட்டனர். அப்போதவன் அவளை நோக்கி, "சிறந்த தவக்கோலம் பூண்ட மாதே! நீ யார்? உன் கரத்திலுள்ள பாத்திரம் உனக்கெவ்வாறு கிடைத்தது?" என வினவினான். அதற்கவள், "வேந்தே! நீ பலகாலம் வாழ்வாயாக! நான் ஒரு கந்தருவப் பெண். இந்நகரில் வேற்றுருவங்கொண்டு திரிந்து வந்தேன். இப்பாத்திரத்தை அம்பலத்திலுள்ள ஒரு தெய்வம் எனக்குத் தந்தது. இது தெய்வத்தன்மை வாய்ந்தது. இதிலிருந்து எடுக்குந்தோறும் அன்னம் வளர்ந்து கொண்டே வரும். அன்றியும், இது யானைத்தீ யென்னும் கொடிய பிணியையும் ஒழித்தது." என்றனள். அவ்வாறாயின், "நான் உனக்குச் செய்ய வேண்டிய உதவி யாது?" என அக்காவலன் வினவினான். அதற்கவள், "இந்நகரிலுள்ள சிறைச்சாலையை யிடித்து, அதனை அருள் நிரம்பிய முனிவர்கள் தங்குதற்குரிய அறச்சாலை யாக்கவேண்டும்" என்றாள். உடனே அவ்வேந்தன் அவ்வாறே செய்தான்.

---

## 20. உதயகுமரனைக் காஞ்சனன் வாளால் எறிதல்

சிறைச்சாலையிலிருந்து விடுபட்ட காவலாளர்கள் அளவற்ற மகிழ்ச்சியுடன் மணிமேகலையை வாழ்த்திச் சென்றனர். பின்பு மணிமேகலை பற்பல விடங்களுக்குச் சென்று ஆங்காங்குள்ள எளியவர்களை யாதரித்து வந்தாள்.

இவற்றை யெல்லாம் செவியுற்ற உதயகுமான், "மணி மேகலை அம்பலத்திலிருந்து வெளியே வந்ததும், அவளைத் தேரிலேற்றிக் கொண்டு வருவேன்; பின்பு அவள் கற்றறிந்த வித்தைகளையும், அவள் சொல்லும் சிறந்த அறிவைத் தரும் சொற்களையும் கேட்பேன்" எனக் கருதி அம்பலத்திற்குச் சென்றான்.

இவன் செய்தி இவ்வாறாக, காயசண்டிகையின் கணவனாகிய காஞ்சனன், "ஐயோ! என் மனைவி யாதாயினளோ? முன்பு விருச்சிக முனிவனிட்ட சாபத்தின்படி பன்னிரண்டாண்டும் கழிந்து போயினவே! அவள் இன்னமும் வராத காரணம் யாதோ?" எனப் பலவாறெண்ணி ஆகாயவழியே வந்து காவிரிப்பூம்பட்டினத்தை யடைந்து அவளைப் பற்பலவிடங்களில் தேடித் திரிந்தான். பின்பு அவன் அம்பலமணுகி அங்குக் காயசண்டிகை வடிவந்தாங்கி நிற்கும் மணிமேகலையைக் கண்ணுற்றான்.

அவன் அவளைக் காயசண்டிகையே யென நினைத்து அவளருகிற் சென்று, "என் ஆருயிர் போல்வாய்! உன் கையிலுள்ள பாத்திரம் ஒன்றே. அதைக்கொண்டு நீ பல பேருக்கு அன்னமளிக்கின்றனையே! இஃதென்ன விந்தை! நீ யானைத்தீ யென்னும் நோயால் வருந்துவதைக் கண்ட தேவர்கள் இதனை உனக்கு வழங்கினரோ?" என வினவினான். அவள் அதைப் பொருட்படுத்தாமல், உதயகுமானிருந்த விடமணுகி,

> "பூவினுஞ் சாந்தினும் புலால்மறைத் தியாத்துத்
> தூசினும் அணியினும் தொல்லோர் வகுத்த
> வஞ்சந் தெரிவாய் மன்னவன் மகனே"

எனப் பல இனிய மொழிகளால் உடலினிழிவை எடுத்துக்

கூறி, அவனுக்கு அறிவு புகட்டத் தொடங்கினுள். அதனைக் கண்ட காஞ்சனன், "ஓகோ! இவள் உதயகுமாரனைக் காதலித்தனள். அதனுல் தான் இவள் என் மொழியை யேற்றுக் கொள்ளவில்லை. அன்றியும், இவள் அம்மன்ன வன் மகனுக்கு நல்லறிவு புகட்டுவாள் போல், தன் காதற் குறிப்பை வெளிப்படுத்துகின்ருள். இக்காரணம் பற்றியே இவள் இங்கே தங்கிவிட்டனள் போலும்" என்று நினைத்து மிக்க கோபத்துடன் அவ்வம்பலத்தில் ஓரிடத்தில் மறைந் திருந்தான்.

இதனை யுணராத உதயகுமாரன் மணிமேகலை பால் கொண்ட காதல் தணியாதவனுய், "மணிமேகலையே காய சண்டிகை வடிவந்தாங்கி நம்மை மயக்கினள். அன்றியும், இங்கு ஒரு அயலான் வந்து இவளிடம் பழைய நட்பைப் பாராட்டிப் பேசுகிறுன். ஆதலால், இவள் இன்றிரவு இங்கு நின்று மகலாள். இதனை நான் நடு நிசியில் வந்து அறிவேன்" என்றெண்ணித் தன்னிருப்பிட மடைந்தான். மணிமேகலை தன் வழக்கம் போல் சம்பாபதி கோயிலிற் சென்று தங்கினுள். பின்பு உதயகுமாரன் முன்பு தான் எண்ணியபடியே எல்லோரும் உறங்கும் நடுயாமத்திருளி லெழுந்து தனியே சென்று, கொடிய விஷத்தையுடைய நாகம் வசிக்கும் புற்றில் நுழைபவன் போல் அம்பலத்தில் புகுந்தான். அப்போது அங்கே மறைந்திருந்த காஞ்ச னன், "இவன் காயசண்டிகையைக் காதலித்தே இந்நள் ளிருளில் வந்தான்" எனக் கருதி, கொடிய நாகம் தனது விடப்பல் தோன்றப் படத்தை விரித்தெழுந்தது போல் சீறி, மிக்க விரைவாய் அவன் பின் சென்று அவன் தோளைத் துணித்து வீழ்த்தினன். ஐயோ பாவம்! உதய குமாரன் வீணுய் மடிந்தான். பின்பு அவன் காயசண்டிகை

யின் வடிவந்தாங்கிய மணிமேகலையைப் பிடித்துக் கொண்டு ஆகாய வழியாய்ச் செல்லக் கருதி அவளை யணுகினன்.

அப்போது அங்குள்ள தூணொன்றில் மயனால் நிருமிக்கப்பட்ட கந்திற்பாவையானது அவனை நோக்கி, "காஞ்சன! அவளருகிற் செல்லாதே! செல்லாதே!! அவள் காயசண்டிகை யல்லள்; மணிமேகலையே காயசண்டிகை வடிவந்தாங்கினள். உன் மனைவியாகிய காயசண்டிகை தன் பசிப்பிணி தீர்ந்து ஆகாய வழியே சென்றனள். ஆகாய நெறியே செல்வோர் துர்க்காதேவி குடியிருக்கும் விந்தமலையின் வழியாய்ச் செல்லார். அப்படி யாரேனுஞ் சென்றால், அம்மலையைக் காக்கும் விந்தாகடிகை யென்பவள் அவர்கள் சாயையைப் பிடித்திழுத்து விழுங்கி விடுவாள். உன் மனைவி இதனை யுணராது அவ்வழியே செல்ல, அந்தத் தெய்வமாது அவளைப் பிடித்து விழுங்கி விட்டாள். காஞ்சன! இன்னுங் கேட்பாயாக. சிறுதொழிலை மேற்கொள்ளாதே. உதயகுமரன் முன்பு ஒரு மடைத்தொழிலாளனைக் கொன்றான். அதனால் அவனிப்போது நின்னால் கொலையுண்டனன். நீ சிறிதும் ஆராயாமல் அவனை வதைத்தமையால், நீ அறிவற்றவனானாய். ஐயோ! பெரும் பாதகத்தொழில் செய்துவிட்டனை! இப்பாவம் உன்னையும் விடாது தொடரும்" என மொழிந்தது. அதனைக் கேட்ட காஞ்சனன் மிக்க வருத்தத்துடன் ஆகாய மார்க்கமாய்ச் சென்று தனதிருப்பிடஞ் சேர்ந்தனன்.

---

## 21. மணிமேகலைக்குக் கந்திற்பாவை வருவதுரைத்தல்

சம்பாபதியின் கோயிலிலிருந்த மணிமேகலைக்கு இச் செய்தி யனைத்தும் தெரிந்தது. உடனே அவள் தனது உண்மை வடிவுடன் வெளியே வந்து "ஐயோ! நாயக! முற்பிறப்பில் நீ திட்டிவிட மென்னும் பாம்பால் உயிர் துறந்தனை. உன் பிரிவைப் பொறுமல், பின்பு நான் தீயில் பாய்ந்தேன். உபவனத்தில் நானுன்னைக் காதலித்தது உண்மையே. அப்போது மணிமேகலா தெய்வம் என்னை மணிபல்லவத்திற்குக் கொண்டுபோய்ப் புத்த பீடத்தைத் தரிசிக்கச் செய்தது. அதனால், நான் நம்மிருவர் பிறப்பையும் உணர்ந்தேன். பின்பு உன்னை நல்வழிப் படுத்தக் கருதி,

> " பிறந்தோ ரிறத்தலும், இறந்தோர் பிறத்தலும்,
> அறந்தரு சால்பும், மறந்தரு துன்பமும்,
> யான்நினக் குரைத்துநின் இடர்வினை யொழிக்க
> காயசண் டிகைவடி வானேன் காதல "

ஆ! 'தானொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்கும்' என்றபடி, என தெண்ணம் ஈடேருமல் போயிற்றே! ஐயோ! இனி யான் என் செய்வேன்? உன் தீவினைப் பயனுல் காஞ்சனன் கைவாளால் வெட்டுண்டனை போலும்." எனப் பலவற்றைச் சொல்லிப் புலம்பி யழுது உதயகுமரனைக் குறுகலானுள்.

அப்போது கந்திற்பாவை அவளை நோக்கி, "பெண்ணருங்கலமே! அவனிடம் செல்லாதே! செல்லாதே! நீ அவனுக்கு மனைவியாகியதும், அவன் உனக்குக் கணவனுகியதும் முற்பிறப்பில் மட்டுமல்ல. அதற்கு முன்னும் பல பிறவிகளில் நீங்களவ்வாறே யிருந்தீர். துன்பந்தரும் இப்

பிறவிகளை ஒழிக்க முயல்வோய்! அவன் பொருட்டு நீ சிறிதும் வருந்தாதே." என மொழிந்தது. அப்போது மணிமேகலை, "இவ்வம்பலத்தி லிருந்து உண்மை யுரைக்கும் தெய்வம் நீதானோ? அவ்வாறாயின் உன் திருவடியை வணங்குகிறேன். முற்பிறப்பில் உதயகுமரன் திட்டி விடமென்னும் பாம்பாலும், இப்பிறப்பில் காஞ்சனன் வாளாலும் உயிர்துறக்கக் காரணமென்ன? அதனை யெனக்கறிவிக்க வேண்டும்" என்றனள்.

அதற்கு அப்பாவை அவளை நோக்கி, "செவ்வரி படர்ந்த நெடுங்கண்ணாய்! முன்பு நீ உன் கணவனாகிய இராகுலனுடன் காயங்கரை யென்னும் ஆற்றை யடைந்தனை. அங்கே பிரமதருமரென்னும் முனிவர் பலர்க்கு அறநெறியைப் போதித்துக் கொண்டிருந்தார். அப்போது நீயும் உன் கணவனும் சென்று அவரை வணங்கி அவர்க்கு உணவளிக்க விரும்பினீர். அவர் அதற்குடன்பட்டனர். பின்பு உன் கணவன் அதி காலையில் சமையல் ஆகவேண்டுமென மடைத் தொழிலாளனுக்குக் கட்டளையிட்டான். அவன் குறித்த காலத்தில் சமையல் கொண்டு வாராமல், சிறிது நேரங் கழித்து வந்தான். அக்காரணத்தால், உன் கணவனைக் கண்டதும் அவன் தன் உடல் நடுங்கிக் கீழே விழுந்தான். அப்போது அவன் கொண்டு வந்த சோற்றுப் பாத்திரம் உடைந்து போய் விட்டது. அவன் எளிய நிலைமையைக் கண்டும், உன் கணவன் சிறிதும் இறங்காமல், 'அவன் குறித்த காலத்தில் முனிவர்க்கு உணவைக் கொண்டு வரவில்லை' என்னுங் கோபத்தால் உடனே அவன் தோளையும் தலையையும் துணித்தான். அத்தீவினைப் பயனால் தான், முன்பு திட்டி விடத்தாலும் இப்போது காஞ்சனன் கை வாளாலும் இவன் கொலை யுண்டனன்.

இளங்கொடி போல்வாய்! இன்னுங் கேட்பாயாக. இனி உதயகுமரன் தந்தையாகிய நெடுமுடிக்கிள்ளி, தன் புதல்வன் உன் பொருட்டால் இறந்தனனெனக் கருதி உன்னைச் சிறையிலிடுவான். பின்பு அவன் மனைவி உன்னைத் தன் காவலில் வைத்துக் கொள்வாள். அதன் பிறகு மாதவி அறவணவடிகளுடன் வந்து உன்னை மீட்பாள். அப்பால் ஆபுத்திரனுடன் மணிபல்லவம் சென்று சேர்வாய். அந்த ஆபுத்திரன் புத்த பீட தரிசனத்தாலும், தீவதிலகையாலும் தன் முற்பிறப்பின் வரலாற்றை யுணர்ந்து தன் னிருப்பிடமடைவான்; அவன் சென்ற பின், நீ ஒரு முனிவன் வேடங்கொண்டு வஞ்சி நகரமனுகிப் பற்பல சமய வாதிகளின் கொள்கைகளை யாராய்ந்தறிவாய்" என்றது.

பின்பு மணிமேகலை "என் மரணமளவும் நிகழுஞ் செய்திகளை யெல்லாம் எனக்கு உரைக்க வேண்டும்" என்று அப்பாவையைத் தொழுதாள். அதற்கு அப்பாவை பெண் "பாவாய்! காஞ்சிமா நகரில் ஒரு பெரும் பஞ்சமுண்டாகும். அப்போது நீ அங்குச் சென்று பல எளியவர்களை ஆதரிப்பாய். அன்றியும், அங்கே நீ அறவணவடிகளைக் கண்டு அவர் உபதேசம் பெற்றுப் பல நல்லறங்களைப் புரிந்தபின், அங்கேயே துறவறம் பூண்டொழுகுவாய். அடுத்த பிறவிகளில் நீ உத்தாமகத மென்னும் பதியில் தோன்றுவாய். இனி நீ ஆண் மகனாயுதித்து ஒவ்வொரு பிறவியிலும் நல்வினைகளையே புரிவாய். கடைசியில், நீ புத்த தேவனுக்கு முதல் மாணவனாய் விளங்கிப் பிறகு நிருவாண மடைவாய்" என்றது. பின்பு மணிமேகலை தன் துயரந் தணிந்தாள். சிறிது நேரங் கழிந்ததும் சூரியனுதித்தான்.

---

## 22. நெடுமுடிக்கிள்ளி மணிமேகலையைச் சிறைசெய்தல்

சூரியனுதித்ததும், வழக்கம்போல் சம்பாபதி கோயிலை வணங்கப் பலர் வந்தனர். அவர்கள் உதயகுமான் வெட்டுண்டு கிடப்பதைக் கண்டு அங்குள்ள முனிவர்களுக்கு மொழிந்தனர். அவர்கள் மணிமேகலையை வினவ, அவள் சிறிதும் அஞ்சாமல் நடந்தவற்றை யெல்லா முரைத்தனள். பின்பு அவர்கள் உதயகுமான் உடலையும் மணிமேகலையையும் ஓரிடத்தில் ஒளித்து வைத்து நெடுமுடிக்கிள்ளியின் கோட்டை வாயிலைக் குறுகி, அம்மன்னவனைக் கண்டு வாழ்த்தினர். பின்பு அவர்களிலொருவர் "வேந்தர் வேந்தே! இந்நாட்டில் பத்தினிப் பெண்டிரையும் சிறந்த தவமகளிரையும் விரும்பி உயிர்துறந்தோர் முற்காலத்தும் பலருளர். அஃதிப்போது மட்டுமல்ல. இதற்கு ஒருதாரண முரைக்கின்றேன் கேளும்.

முன்னொரு காலத்தில் காந்தனென்னும் மன்னவன் இந்நகரை யாண்டு வந்தான். அரசர் குலத்தை யழித்த பரசுராமன் அவனுடன் போர் புரிய வந்தான். அம்மன்னவனும் தன் படையைத் திரட்டிக்கொண்டு பரசுராமனை யெதிர்க்கத் தயாரானன். அப்போது துர்க்கை அவ்வேந்தனை நோக்கி "நீ இப்பொழுது பரசுராமனுடன் போர் தொடங்காதே" என்றாள்.

அதனாலவன், ஒரு கணிகையின் புதல்வனும் சிறந்த வீரனுமாகிய ககந்தனென்பவனை யழைத்து, "அரசாளும் குல வுரிமை உனக்கின்மையால், பரசுராமன் உன்னோடு போர்புரியான். நான் அகத்திய முனிவன் அருள் பெற்று இங்குத் திரும்பி வருமளவும் நீ இந்நகரைக் காப்பாயாக.

இந்நகரை நீ காத்தலால், இன்று முதல் இதற்குக் காகந்தி யென்னும் பேர் உண்டாகக் கடவது.'' எனக் கூறி, வேற்றுருவத்துடன் வேறு தேயஞ் சென்றான்.

பின்பு ககந்தன் அவ்விறையவன் கட்டளையின்படி, இந்நகரை யாண்டு வந்தான். அப்போதொருநாள் ககந்தன் குமாரர்களில் இளையவன் காவிரி நதிக்குச் சென்றான். அங்கே மருதி யென்னும் பார்ப்பனி நீராடி வருவதைக் கண்டு அவன் அவளைக் காதலித்தான். சிறந்த உத்தமியாகிய அவள் மனங் கலங்கித் தன் மாளிகைக்குச் செல்லாமல் * பூதசதுக்கம் புகுந்து, "தெய்வமே! நான் என் நாயகனுக்கு ஒரு விதத்திலும் தவறிழைக்கவில்லையே! அவ்வாறிருந்தும், என்னை வேற்று மனிதன் விரும்பக் காரணமென்ன? என் குற்றம் எனக்கே விளங்கவில்லை. பூதசதுக்கத்துத் தெய்வமாகிய நீ இருப்பது பொய்யோ?" எனக் கதறி யழுதாள். அப்போது அப்பூதம் அவளெதிரில் தோன்றி, "மடக்கொடி போல்வாய்!

"தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழு தெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை"

என்பது பொய்யா மொழியன்றோ! நீ அதனை யாராய்ந்தறியாமல், பொய்க் கதைகளையும், நகை மொழிகளையும் கேட்டும், திருவிழாக்களைக் கண்டு களித்தும் தெய்வத்தை வழிபட்டும் வந்தனை. அதனால் உன் கற்புக் குன்றிப் போய்விட்டது. உன்னைக் காதலித்தவனை ஏழு நாட்களுக்குள் இந்நகரத்திற் கிறைவனாகிய ககந்தன் தன் வாளால் தடிந்து

---

* பூதம் நிற்கும் நாற்சந்தி கூடுமிடம்; இது தீத்தொழில் புரிவோரைத் தன் கைப்பாசத்தால் பிணித்துப் பூமியில் புடைத்து உண்ணுமென்பார்.

விடுவான்" என மொழிந்தது. பின்பு அக்கொடியவன் அவ்வாறே தன் தந்தையால் கொல்லப் பட்டான்.

மன்னவரேறே! இன்னுங் கேட்பீராக. முன்பு இந்நகரில் தருமதத்தனென்னும் வாணிகனொருவ னிருந்தான். அவன் மாமனுக்கு விசாகையென்னும் மகளொருத்தி யிருந்தாள். அவர்களிருவரும் ஒருவரையொருவர் அன்பு பாராட்டி வந்தனர். அதனைக் கண்ட இந்நகர மாந்தர் அவர்கள் காந்தருவ மணம் புரிந்து கொண்டதாய்ப் பழி தூற்றலாயினர். அப்போது விசாகை மிகவும் வருத்தத்துடன் கந்திற்பாவையை யணுகி, "நீ இப்பெரும் பழியைப் போக்கவேண்டும்" எனத் தொழுதனள். அப்போது அப்பாவை, "விசாகை குற்றமற்றவள்" என, இவ்வூராரனைவரும் அறியும்படி உரத்துக் கூவினது. பின்பு விசாகை, "இந்தத் தெய்வம் இவ்வாறுரையா விடின், இவ்வூரார்க்கு என்னிடமுண்டாகிய சந்தேக மொழியாது. ஆதலால், நான் இப்பிறப்பில் தருமதத்தனை மணம் புரியேன்; மறுபிறப்பில் தான் அவனை மணப்பேன்" எனக் கூறி, அன்று முதல் கன்னிமாட மடைந்து கடவுளை வணங்கி வந்தாள். பின்பு தருமதத்தன் "விசாகையை யன்றி வேறு மகளிரை மணஞ்செய்து கொள்ளேன்" என்று வாணிகஞ் செய்து திரண்ட பொருள் சேகரித்தான். ஒருநாள் ஓரந்தணன் அவனை யணுகி, வணிகருட் சிறந்தோய்!

"பத்தினி யில்லோர் பலஅறஞ் செய்யினும்
புத்தே ளுலகம் புகாஅர்"

என்பதை நீ கேட்டதில்லையோ? ஆதலால், நீ விரைவில் விவாகஞ் செய்து கொள்" என்றான். உடனே அவன் மீண்டும் இந்நகரமணுகி விசாகையை மணக்கக் கருதினன். அவன் வருகையைக் கேட்ட விசாகை மிக்க ஆவலுடன்

கன்னிகா மாடத்தை விட்டுச் சென்று அவனை யணுகிச் சிறிதும் நாணமின்றி, "அறிவிற் சிறந்தவனே! நம்மில் ஒருவரை யொருவர் இப்போது அறிந்திலம். நம்மை மயக்கிய அழகும் இளமையும் எங்கே யொளித்தன? இப்போது உனக்கு அறுபது வயதாய் விட்டன. எனக்கும் தலைமயிர் வெளுத்துப் போயிற்று. ஆதலால் நானிப்போது உன்னை மணஞ்செய்து கொள்ள மாட்டேன். மறுபிறவியில் உன்னைத் தவறாமல் மணப்பேன். இனி நீ தேடிய பொருளை நல்வழியில் செலவு செய்வாயாக" என்றாள். அவன் அதற்குடன்பட்டு அவ்வாறே செய்தான்.

இது நிற்க, முன்பு ஒரு முறை இந்த விசாகை தெருவின் வழியாய் வந்து கொண்டிருந்தாள். அப்போது, முன்பு மருதி யென்னும் பார்ப்பனியால் கொலையுண்டவனுக்கு மூத்தவன் அவளைக் கண்டு காதலித்தனன். அதனால் அவன் தன் தலையிலுள்ள மலர் மாலையை அவள் கழுத்திலிட்டு அவளை மணக்க விரும்பித் தன் குடுமியில் கையை வைத்தான். ஆகா! என்ன அதிசயம்! அவன் தன் குடுமியில் வைத்த கையை மீண்டு மெடுக்க முடியாமல் வருந்தினன். இதற்குக் காரணம் விசாகையின் கற்பின் மேம்பாடேயாம். பின்பு இச்செய்தி அவன் தந்தையாகிய ககந்தனுக்குத் தெரிந்தது. உடனே அவன் அந்தப் புதல்வனையும் வெட்டி வீழ்த்தினன்." என்றார்.

இவற்றை யெல்லாங் கேட்ட நெடுமுடிக்கிள்ளி, "நீங்கள் முன்பு நடந்ததாய் மொழிந்த அத்தீச்செயல்கள் இப்போதும் நடக்கின்றனவோ? என்றான். அதற்கு அம்முனிவர்களில் வேறொருவர், "செங்கோல் வேந்தே! மாதவியின் மகளாகிய மணிமேகலை தவக்கோலம் பூண்டு அம்பலத்தில் வசித்து வருகிறாள். அவள் மேல் கொண்ட

காதல் மிகுதியால், நின் மகனாகிய உதயகுமான் நள்ளிருளில் அவளிட மணுகினன். மணிமேகலை அவனுக்கஞ்சிக் காயசண்டிகை வேடம் பூண்டனள். காயசண்டிகையை அழைத்துச் செல்ல அவள் கணவனாகிய காஞ்சனன் என்னும் கந்தருவன் அங்கு வந்தான். அவன் நின் மைந்தனைக் கண்ணுற்று காயசண்டிகையைக் காதலித்து அவன் அங்கு வந்ததாய்க் கருதி, அவனைத் தன் வாளாலெறிந்தான்" என்றார்.

இதனைக் கேட்ட பின் அம்மன்னவன், தன் மகன் மரித்தமைக்காய்ச் சிறிதும் வருந்தவில்லை. தான் செய்ய வேண்டிய தண்டனையை அந்த வித்தியாதரன் செய்தானாதலால், அவன் குற்றமற்றவனெனக் கருதி மகிழ்ச்சியடைந்தான். ஆயினும், தனக்கு அத்தகைய புதல்வன் தோன்றினனே யெனப்பெரிதும் நாணித் தன் அமைச்சர்களில் ஒருவனாகிய சோழிக வேனாதி என்பவனை நோக்கி, "இதனை மற்ற அரசர்கள் அறியு முன்பே உதயகுமானை அடக்கஞ் செய். உடனே மணிமேகலையையும் சிறையிலிடு" என்றான். அவனவ்வாறே செய்தான்.

---

## 23. மணிமேகலை சிறையிலிருந்து விடுபடல்

தன் மகன் உதயகுமான் வெட்டுண்டதைக் கேட்ட இராசமாதேவி பெரிதும் வருந்தலானாள். அதைக் கண்ட அரசன் வாசந்தவை யென்னும் மூதாட்டி யொருத்தியால் அவளை ஒருவாறு தேற்றுவித்தான். பின்பு அவள் மணிமேகலையை வருத்தக் கருதித் தன் நாயகனை யணுகி, "செங்கோல் வேந்தே! சிறந்த அறிவினையுடைய மணிமேகலையைச் சிறையிலிடுதல் தகாது. அவள் என்னிட

மிருப்பினும் இருக்கட்டும். அல்லது தன் ஓட்டை யேந்திப் பிச்சைக்குச் சென்றாலும் செல்லட்டும். அவளைத் தடுப்பவர் ஒருவருமில்லை" என்றாள். அவ்வேந்தன் அவள் சூழ்ச்சியை யுணராமல் 'நீ விரும்பிய படியே செய்' என்றான்.

உடனே அவள் மணிமேகலையைத் தன் மாளிகைக்கு அழைத்துச் சென்று, "என் புதல்வனைக் கொன்ற இவளை எளிதில் விடேன். இந்நகர மாந்தரனைவரும் அடித்து வருத்தும்படி இவளைப் பைத்தியக்காரி யாக்குவேன்" எனக் கருதி அவளுக்கு ஒருவகை மருந்தை யளித்தனள். அவள் மறுபிறப்புணர்ந்தவ ளாதலின், அதனையுண்டு தன் நிலை குலையாம லிருந்தாள். மீண்டும் இராசமாதேவி இளைஞனாகிய கல்லாக் கீழ்மகனொருவனை யழைத்து, "நீ மணிமேகலை பால் சென்று, அவளைக் கண்டு பேசிப் பின்பு அவளுன்னை விரும்பினதாய்ப் பலர்க்கும் அறிவி" என அவனுக்கு ஏராளமாய்ப் பொருள் கொடுத்தனள். அவன் அதற்கிசைந்து மணிமேகலையை யணுகினான். அவள் அவனைக் கண்டதும், "இது இராசமாதேவியின் சூழ்ச்சியாகும்" எனத் துணிந்து, உடனே வேற்றுருவங் கொள்ளுதற்குரிய மந்திரத்தை யோதி ஆண்மகன் வடிவங்கொண்டு நின்றாள். அவன் அதைக் கண்டு, "அரசன் மனைவிமார் இருக்கும் அந்தப்புரத்தில் ஆண்மக்கள் செல்லார். அவ்வாறிருந்தும் கொடியவளாகிய இராசமாதேவி என்னை இங்கே ஏவியதில் ஏதோ மோசமிருக்கிறது" என்று நினைத்து மிக்க நடுக்கத்துடன் வெளியே ஓடிப்போய் விட்டான். மீண்டு மவள் மணிமேகலையை எவ்வாறாயினுங் கொல்லத் துணிந்தனள். அதனாலவள், 'மணிமேகலை நோயால் துன்புறுகிறாள்; அவள் உணவை உட்கொள்வதில்லை' என மொழிந்து அவளை யோர் புழுக்கறையி லடைத்தனள்.

அவள் உணவைத் துறக்கும் மந்திரமறிந்தவ ளாதலால், அதனை யோதிச் சிறிதும் வருத்தமின்றிச் சில நாளளவும் அதிலேயே யிருந்தனள்.

இவற்றை யெல்லாங் கண்ட இராசமாதேவி மிக்க வியப்பும் நடுக்கமு மடைந்து மணிமேகலையை யணுகி, "பொன் போல்வாய்! என் மகனை யிழந்த துன்பம் பொறாமல், சிறந்த தவ வொழுக்க முடையவளாகிய உன்னைப் பல வாறு வருத்தினேன். அதனைப் பொறுத்தருள்வாயாக" என அவளை வணங்கினள். அப்போது மணிமேகலை அவளை நோக்கி, "பெண்ணருங்கலமே! முன்பு நின் மகனாகிய உதயகுமரன் நீலபதி யென்னும் வேந்தன் வயிற்றில் இராகுலன் என்னும் பெயரினனாய்த் தோன்றினன். திட்டி விடமென்னும் நாகம் அவனுயிரைக் கவர்ந்தது. அவன் மனைவியாகிய நான் உடனே தீயிற் பாய்ந்தேன். அப்போது நீ உதயகுமரன் பொருட்டு எங்கிருந்து புலம்பினாய்? ஆனால், அவன் வெட்டுண்டமைக்குக் காரணம் சொல்கிறேன் கேள். முன்பு அவன் ஒரு மடைத்தொழிலாளனைத் தன் வாளால் துணித்தான். அத்தீவினைப் பயனால் இப்போதவன் ஒரு வித்தியாதரனால் கொல்லப்பட்டான். "இதனை நீ யெவ்வாறறிந்தாய் என்பாயோ? சொல்கிறேன் கேள்" என்று தான் உபவனம் புகுந்தது முதல் கந்திற்பாவை சொன்னது வரையில் நடந்த விஷயங்களை யெல்லாம் விளங்க உரைத்து மேலும் சொல்லத் தொடங்கினள்.

நீ என்னைத் துன்புறுத்தப் பலவித உபாயங்கள் புரிந்தாய். என்னைப் பைத்தியக்காரியாக்கக் கருதி அதற்கேற்ற மருந்தைத் தந்தாய். நான் மறுபிறப்புணர்ந்தவ ளாதலால் அதனை யுண்டு அறிவு குலையாமலிருந்தேன். பின்பு உனது

கட்டளையின்படி கல்வி யறிவற்ற கீழ்மகனொருவன் கரிய இருளில் வந்தான். அப்போது நான் ஓர் ஆண்மகன் வடிவந்தாங்கி நின்றேன். அதன் பிறகு என்னைப் புழுக் கறையி லடைத்தாய். உணவைத் துறக்கும் மந்திர வலிமை யால் அதற்குந் தப்பிப் பிழைத்தேன். நான் விரும்பினால் ஆகாய வழியாய்ச் சென்றாயினும், வேற்றுருவம் தாங்கி யாயினும் தப்பித்துக் கொள்ளக் கூடும். ஆனால் அவ்வாறு செய்யாமைக்குக் காரண மென்ன என்பாயோ? சொல் கிறேன் கேள். முற்பிறப்பில் எனக்கு நாயகனாயிருந்த உதயகுமரனை நீ இப்போது மகனாகப் பெற்றனை. ஆத லால், உன்னை நல்வழிப்படுத்த விரும்பியே நானவ்வாறு செய்யவில்லை.

கற்பினுக்கரசி! நான் சொல்வனதக் கருத்தாய்க் கேள். இவ்வுலகில் கள், களவு, காமம், பொய், கொலை என்னும் இவ்வைந்தையும் அடியோடு துறக்க வேண்டும். அவற்றைத் துறந்தவரே மேன்மையுடையவ ராவார்." என மொழிந்தனள். இவற்றை யெல்லாங்கேட்ட இராச மாதேவி மனந்தெளிந்து மணிமேகலையை வணங்கினாள். அதற்கு அவள் பொறாமல், "ஆகா! யாது காரியஞ் செய் யத் துணிந்தனை. நீ என் நாயகனைப் பயந்தவளன்றோ! அன்றியும் மன்னவன் மனைவியாயிற்றே! எனக் கூறி இராசமாதேவியைத் தொழுதனள்.

---

## 24. மணிமேகலை ஆபுத்திரன் நாட்டை யடைதல்

மணிமேகலை செய்தி யிவ்வாறாக, உதயகுமரன் வெட்டுண்டதைக் கேட்ட சித்திராபதி மிகவும் வருந்தினள். பின்பு அவள் சிறையிலிடப்பட்ட மணிமேகலையை மீட்கக் கருதி இராசமாதேவியை யணுகி, அவள் பாதங்களில் விழ்ந்து வணங்கி, "தாயே! பிறந்த நாள் முதல் யான் பட்ட துன்பம் வேறு எவரும் பட்டிரார். கோவலன் மதுரையில் வெட்டுண்டபின் என் மகளாகிய மாதவி தவக் கோலம் பூண்டாள். அவள் மகளாகிய மணிமேகலை ஓட்டைக் கையிலேந்தி வீடுகள் தோறுஞ் சென்று யாசிக்கிறாள். இவற்றையெல்லாங் கண்டு இந்நகர மாந்த ரனைவரும் இகழ்கின்றார். இதுநிற்க, உதயகுமரன் உயிர் துறந்தது மாத்திரமன்றி, மணிமேகலையால் இந்நகரத்திற்கு ஒரு பெருந் துன்பம் நேரும். அதற்குக் காரணஞ் சொல்கிறேன் கேள்.

முன்பு ஒருமுறை நமது நெடுமுடிக்கிள்ளி மன்னவர் கடற்கரையிலுள்ள சோலையொன்றில் சென்று தங்கினார். அங்கே கட்டழகையுடைய காரிகை யொருத்தியைக் கண்டு, அவளுடன் ஒரு மாதம் தங்கி யிருந்தார். பின்பு அவள் நமது வேந்தருக்குத் தெரியாமலே தன்னிருப்பிடம் போய்ச் சேர்ந்தாள். அவர் அவளைப் பலவிடங்களில் தேடியும் பயன்படவில்லை. அப்போது ஒரு சாரணர் தோன்றி, "வேல் வேந்தே! கேட்பாயாக. நீ சொல்பவள் நாகலோகத்தையாளும் வளைவணன் என்பவனுடைய மகளாம். அவள் பேர் பீலிவளை. அவள் பிறந்த போது சோதிடர் அம்மன்னவனை நோக்கி, 'அரசனே! இவ

ளுக்குத் தக்க பருவம் வந்ததும், இவள் சூரிய குலத்து அரசனுடன் விருந்து கருப்பமடைந்து வருவாள்' என்றனர். நீ சொல்லிய பெண் அவளே. இனி அவள் வர மாட்டாள். அவள் வயிற்றில் பிறக்கும் மகனே உன்னிடம் வருவான். அவளைக் குறித்து நீ வருந்தாதே. நிற்க, நீ இந்திரவிழா நடத்தாத காலத்தில், உன்னகரைக் கடல் கொள்ளும். மணிமேகலா தெய்வத்தின் வாய் மொழியும் இந்திரன் சாபமும் தவருகா. ஆதலால் நீ இந்திரவிழாவைத் தவருமல் நடத்தி வா" என்று சொல்லிப் போய் விட்டார்.

அதுமுதல் இந்நகர மாந்த ரனைவரும் இந்நகரத்தை யெப்போது கடல் கொள்ளுமோ என அஞ்சுகின்றனர். தன் பெயரை யுடைய மணிமேகலை துயருறுவதைக் கண்டால் அதைத் தணிக்க ஒருகால், அந்தத் தெய்வம் வருமோவென நானுமஞ்சுகிறேன். ஆதலால் மணிமேகலையை என் மனைக்கு அனுப்புவாயாக" எனத் தொழுதனள்.

இவற்றையெல்லாங் கேட்ட இராசமாதேவி சித்திராபதியை நோக்கி, "பெண்ணே! மணிமேகலை கள்ளுண்ணல், பொய் பேசல், கொலை புரிதல் முதலியவை கொடியன வென்று அவற்றை யடியோடே வெறுத்துத் தவவொழுக்கம் மேற்கொண்டாள். இனி அவள் என்னுட னிருப்பாளே யொழிய, உன் வீட்டிற்கு ஒருபோதும் வாராள்." என மொழிந்தனள். அத்தருணம் மாதவி தன்மகளை மீட்கக் கருதி அறவணவடிகளுடன் அங்கு வந்தனள். அவரைக் கண்டதும் மணிமேகலை, இராசமா தேவி, சித்திராபதி ஆகிய மூவரும் வணங்கி, அவர் ஆசி மொழிகளைப்

பெற்றனர். பின்பு அவர் அவர்களுக்கு உபதேசம் செய்துவிட்டுத் தமதிருப்பிடம் போயினர்.

அதன் பிறகு மணிமேகலை இராசமா தேவியை நோக்கி, "இனி நான் இங்கிருத்தல் தகாது; வேற்றூருக்குச் செல்வேன். ஏனெனில், என்னைக் கண்டோ ரனைவரும் 'உதயகுமரனைக் கொன்ற கொடியவள் இவளே' எனப் பரிகாசஞ் செய்வார்" என்று சொல்லி அன்றுமாலை அங்கிருந்து புறப்பட்டாள். பின்பு அவள் சம்பாபதியையும், கந்திற்பாவையையும் வணங்கி ஆகாயவழியே சென்று புண்ணியராசனென்னும் ஆபுத்திரன் நகரத்திலுள்ள ஒருசோலையில் தங்கிச் சிறிது இளைப்பாறினாள். அங்கே அவள் ஒரு முனிவரைக் கண்டு தவச்செல்வரே! இஃதென்ன நகரம் என்று வினவ, அவர் "இது நாகபுரம்; இதனைப் புண்ணிய ராசனென்பவன் நீதி தவறாமல் ஆண்டு வருகிறான். அதனால் குடிமக்க ளனைவரும் பசி, பிணி, பகை முதலிய துன்பங்களின்றிச் சுகமாய் வாழ்ந்து வருகின்றனர்" என்றார்.

---

## 25. மணிமேகலை ஆபுத்திரனோடு மணிபல்லவமடைதல்

அத்தருணம் அந்நாட்டிற் கிறைவனாகிய புண்ணிய ராசன் தன் மனைவியுடன் அப்பூம்பொழிலை யடைந்து அங்குள்ள தருமசாவகரென்னும் முனிவரை யணுகி வணங்கினான். பின்பு அக்கொற்றவன் மணிமேகலையைக் கண்ணுற்று, "இவள் யார்?" என அவரை வினவினான். அப்போது அவனருகிலிருந்த பிரதானி அவனை நோக்கி, "மன்னர் மன்ன! நான் முன்பு ஒருமுறை கிள்ளிவளவனோடு நட்பைப் பெற விரும்பிக் காவிரிப்பூம் பட்டினம்

சென்றிருந்தேன். அங்கே நான் அறவணவடிகளைக் கண்டு வணங்க, அவர் இவள் வரலாறுகளை எனக்குத் தெளிவாய்ச் சொன்னார். நானிதனை முன்பே தங்களுக்குச் சொல்லி யிருக்கிறேன். இப்போது இங்கே வந்திருக்கின்றவள் அவள் தான்" என்றான். அப்போது மணிமேகலை அவ் வேந்தனை யணுகி, "வெற்றி வேல் வேந்தே! இப்பாத் திரம் முன்பு உன் கையிலிருந்தது. இப்போது இது என் கைக்கு வந்தது. செல்வச் செருக்கால் உன்னை நீ யுணர வில்லை. நீ மணிபல்லவஞ் சென்று புத்தபீடத்தை வணங்கினால் உன்பழம் பிறப்பை யுணர்வாய்"' என்று சொல்லி ஆகாய மார்க்கமாய் மணிபல்லவம் சென்று சேர்ந் தாள்.

பின்பு புண்ணியராசன் தன்னரண்மனை யணுகித் தன்னை வளர்த்த தாயாகிய அமரசுந்தரியை நோக்கி "தாயே! என் பிறப்பு வரலாற்றை ஒளியாமல் உள்ளபடி யுரைக்க வேண்டும்" என வினவினான். அதற்கவள், என் அருமைக் கண்மணி! கேட்பாயாக. நீ ஒரு பசுவின் வயிற் றில் முட்டையாய்த் தோன்றிப் பின்பு ஒரு குழந்தையா னாய். உன்னை மண்முகனென்னும் ஒரு முனிவன் சில நாள் வரையில் வளர்த்து வந்தான். அப்போது இந்நாட்டைப் பூமி சந்திரன் ஆட்சி செய்து வந்தான். அவனுக்குப் புத் திரப் பேறின்மையால் அவன் அம்முனிவனை வணங்கி உன்னை வாங்கி வந்து என்னிட மளித்தான். அன்று முதல் நான் உன்னை வளர்த்து வந்தேன்." என்றாள்.

இதைக் கேட்டதும், அம்மன்னவனுக்கு அரசாட்சி யின் மேல் வெறுப்புண்டாயிற்று. அதனாலவன் தன் மந் திரியை நோக்கி, "மதி யல்லோய்! நான் முன் செய்த நல் வினை இப்போது மணிமேகலையின் மூலமாய் எனக்குப்

பயன் தந்தது. ஆதலால், இன்று முதல் இந்த அரசாட்சிச் சுமையை நீயேற்றுக்கொள்" என்றான். அதற்கவன்மந்திரி அதனை மறுத்து, "கொற்றவரேறே! பூமிசந்திரன் அரசாண்ட போது பன்னிரண்டாண்டு வரையில் வானம் வழங்காதாயிற்று. அதனால் பெரும் பஞ்சம் மேலிடவே, உயிர்கள் மிகவும் வருந்தலாயின. கோடையால் வருந்தும் உயிர்களுக்குக் குளிர்ந்த மழை தோன்றினது போல் அப்போது நீர் கிடைத்தீர். அது முதல் பருவம் தவறாமல் மழை பெய்து வருகிறது. உயிர்களெல்லாம் மிகவும் இன்பத்துடன் வாழ்கின்றன. இப்போது நீர் இந்நாட்டை விட்டகன்றால், எல்லா உயிர்களும் தாயையிழந்த குழந்தைகளைப் போல் பரதவிக்கும். உலகத்திலுள்ள உயிர்களையெல்லாம் வருந்த விட்டு, உமது நலத்தை மட்டும் நாடுதல் தகுமோ?" என்றான்.

பின்பு அவ்வேந்தன், "நான் மணிபல்லவஞ் சென்று ஒரு மாதத்தில் திரும்பி விடுகிறேன். அது வரையிலாயினும் நீ இந்நாட்டைப் பாதுகாத்து வா" என்று கட்டளையிட்டு, உடனே ஒரு கப்பலிலேறி மணிபல்லவமடைந்தான். அங்கே மணிமேகலை அவனை யழைத்துச் சென்று புத்த பீடத்தைக் காட்டினாள். அவன் அதனைத் தொழுது தன் முற்பிறப்பை யறிந்தான். பின்பு அவன் முன்பு தனக்கு அமுதசுரபி யென்னும் பாத்திரத்தை யளித்த சிந்தாதேவியை வழிபட்டு, மணிமேகலையுடன் கோமுகிப் பொய்கையை யணுகினான். அங்கே தீவதிலகை தோன்றி 'அன்புடையோய்! முற்பிறப்பில் நீ சாவக நாட்டிலுள்ள எளியவர்களை உண்பிக்கக் கருதி அமுத சுரபியுடன் கப்பலேறிப் புறப்பட்டு வந்து இங்கே இறங்கினை. பின்பு அக்கப்பல் போய் விட, நீமாத்திரம் இங்கே தங்கி விட்டாய்.

கப்பல் சிறிது தூரம் சென்ற பின், உன்னுடனிருந்த செட்டி மக்கள் ஒன்பது பேருக்கு உன் நினைவு வந்தது. உடனே அவர்கள் மீண்டும் வந்து உன்னைக் காண, நீ இறந்து கிடந்தாய். உன் பிரிவைப் பொறுமல் அவர்களனைவரும் உடனே தம்முயிரைத் துறந்தனர். அவர்களுடைய எலும்புகள் இங்கே கிடப்பதைப் பார். அன்றியும் புன்னைமர நிழலில் மணலால் மூடுண்டு கிடக்கும் உன் உடலையும் பார்." என்றாள்.

பின்பு அந்தத் தெய்வமாது மணிமேகலையை நோக்கி, "நல்லொழுக்கமுள்ள நங்காய்! நீ வசிக்கும் காவிரிப்பூம் பட்டினம் கடலில் முழுகி விட்டது. அதற்குக் காரணஞ் சொல்கிறேன் கேள்: நாகநாட்டரசனாகிய வளைவணன் என்பவனுக்குப் பீலிவளை யென்னும் புதல்வி யொருத்தி யுண்டு. அவள் புத்த பீடத்தைக் கண்டு வணங்க இங்கே வந்தாள். அப்போது கம்பளச்செட்டி யென்னும் வணிகன் தன் கப்பலைவிட்டு இங்கே இறங்கினான். உடனே அவள் அவனை யணுகித் தன் குழந்தையை அவனிடமளித்து "இவன் அரசன் மகன். இவனை அம்மன்னனிடம் சேர்ப்பாயாக" என்றனள். அவனதற்கிணங்கி, அக்குழந்தையைப் பெற்றுக் கொண்டு கப்பலேறினான். நடு வழியில் கப்பல் உடைந்து போய் விட்டது. அதிலுள்ளார் பலர் உயிர் துறந்தனர். தப்பிப் பிழைத்த சிலர் காவிரிப்பூம் பட்டினமணுகி அம்மன்னவனுக்கு இச்செய்தியை யுரைத்தனர். அவன் தன் புதல்வன் மேலுள்ள அன்பின் மிகுதியால் அவ்வணிகனைப் பல விடங்களில் தேடித் திரியலானான். அப்போது அவ்வூரார் இந்திர விழாவை மறந்தனர். உடனே மணிமேகலா தெய்வத்தின் சாபத்தின்படி அந்நகரைக் கடல் கொண்டது. அவ்வூரரசன் வேறு

தேயம் சேர்ந்தான். மாதவி சுதமதி யிருவரும் அறவண வடிகளுடன் வஞ்சிமாநகர் புக்கனர்." என்று சொல்லி மறைந்து விட்டாள்.

பின்பு புண்ணியராசன் தன் பழைய உடலின் எலும்புகளைக் கண்டு மயங்கினான். அப்போது மணிமேகலை அவனுக்குத் தருமோபதேசம் செய்தாள். பின்பு அவள் அவனை அவன் நகரத்திற் கனுப்பிவிட்டுத் தான் ஆகாய மார்க்கமாய் வஞ்சி நகரத்திற்குச் செல்லப் புறப்பட்டாள்.

---

## 26. மணிமேகலை வஞ்சிமாநகர் புகுதல்

பின்பு மணிமேகலை தனது பெற்றோராகிய கண்ணகி, கோவலன் என்னுமிருவர் கோயிலைக் கண்டு வணங்கி, "தாயே! பத்தினிப் பெண்கள் தமது கணவன் இறந்ததைக் கேட்டவுடனே உயிர் துறப்பர்; அல்லது தீப்பாய்வர். இவ்விரண்டில் ஒன்றையுஞ் செய்ய இயலாதவர் கைம்மை மேற்கொண்டு தமது நாயகனைச் சென்று சேரக் கருதி நற்றவங் கிடப்பர். தாங்கள் இவற்றுள் யாதொன்றும் புரியாது மதுரைமா நகரை யழித்த காரணமென்ன? அதனை யெனக்கு விளங்க உரைக்க வேண்டும்" என வேண்டி நின்றாள்.

அப்போது கண்ணகி அவளெதிரில் தோன்றி, "என் கண்ணே! கேட்பாயாக. எனது நாயகன் கொலையுண்டதைக் கேட்டு நான் மதுராபுரியை எரிக்க எண்ணினேன். அப்போது மதுரையம் பதியிலுள்ள மதுராபதி தெய்வம் தோன்றி, "கற்பினுக்கணிகலம் போல்வாய்! இப்பெருந் துன்பங்கள் உமக்குண்டானமைக்குக் காரணம், நீர் முற்பிறப்பில் செய்த தீவினைப் பயனும். அதனைச் சொல்கிறேன்

கேள். முன்பு கபில நாட்டிலுள்ள சிங்கபுரத்தை வசு வென்பவனும், கபிலையைக் குமரனென்பவனும் ஆண்டு வந்தனர். அவ்விருவர்க்கும் பகைமை மேலிடவே, அவர்கள் போர்புரியத் தொடங்கினார்கள். அப்போது சங்கமனென் னும் வணிகன் தன் மனைவி நீலி யென்பவளுடன் சிங்க புரஞ்சென்று வாணிகஞ் செய்யத் தலைப்பட்டான். அத னைக் கண்ட பாதனென்பவன் சங்கமன்பால் பொறாமை கொண்டு, 'இவன் பகை வேந்தனாகிய குமரனுடைய ஒற்றன்' எனத் தனது மன்னவனாகிய வசு வென்பவனுக்கு மொழிந்தான். அக்காவலன் அப்பாதன் மொழியை நம் பிக் குற்ற மற்றவனாகிய அவ்வணிகனைப் பிடித்துக் கொலை புரிந்து விட்டனன். பின்பு அவன் மனைவியாகிய நீலி தன் நாயகனுக்கு நேர்ந்த துன்பத்தை யெண்ணிக் கண்ணீர் ஆறாய்ப் பெருகக் கதறியழுது, "எமக்கு இப்பெருந் துன் பத்தை இயற்றினோர் மறுபிறப்பில் இதனைத் தவறாமல் அநுபவிக்கக் கடவார்" எனக் கூறி ஒருயர்ந்த மலைமே லேறிக் கீழே விழுந்து உயிர் துறந்தாள். அப்பாதனே இப்போது கோவலனாகப் பிறந்தான். முன்பு செய்த தீவினை ஒருவரையும் விடாது." என்று சொல்லிப் போயிற்று.

அதன் பிறகும் என் சீற்றம் தணியாமையால், நான் மதுரையை எரித்தழித்தேன். நிற்க, முன்பு செய்த நல் வினைப்பயனால் நானும் என் கணவனும் தேவர்களானோம். எங்கள் நல்வினை முடிந்தவுடன் நாங்கள் மீண்டும் பிறப்பிறப் புக்களை யடைந்து துன்பமுறுவோம். பின்பு மழை வளம் மாறாத மகதநாட்டிற்குத் திலகம் போன்ற கபிலபுரத்தில் புத்த ஞாயிறு தோன்றுவார். அவர் போதி யென்னும் அரச மரத்தடியிலிருந்து உயிர்களுக்குத் தருமோப

தேசஞ் செய்வார். அப்போது நாங்கள் அவருபதேச மொழிகளை யேற்றுப் பிறவிக் கடலைக் கடப்போம். முன்பு நானும் உன் தந்தையும் காவிரிப்பூம் பட்டினத்திலுள்ள * இந்திர விகாரம் எழினையும் தொழுதமையால், இப் பெரும் பேற்றை நாங்கள் பெற்றனம். இது நிற்க,

"மணங் கமழுங் கூந்தலையுடைய மாதே! இனி உன் செய்தியைக் கேள். நீ இவ்வூரில் பற்பல சமய வாதிகளின் கொள்கைகளைக் கேட்டுணர்வாய். அவைகளில் ஒரு சிறிதும் உண்மை யின்மை யறிந்து கடைசியில் புத்த மதத்தைத் தழுவுவாய்" என மொழிந்து மறைந்தாள். பின்பு மணிமேகலை ஒரு மந்திர மோதி ஒருதவ முனிவன் வடிவந் தாங்கி, பலவகை வளங்கள் நிரம்பிய சேரன் செங்குட்டுவனுடைய வஞ்சிமா நகரம் புகுந்தனள்.

---

## 27. மணிமேகலை சமயவாதிகள் கொள்கைகளை அறிதல்

பின்பு மணிமேகலை பற்பல சமயவாதிகள் கொள்கைகளை யறிய விரும்பி, முதலில் அளவை வாதியரை யடைந்தனள். அவர்கள் தங்கொள்கைகளை அவளுக்கு விளங்கக் கூறினர். அதன் பிறகு அவள் சைவ வாதியர், பிரம வாதியர், வைணவ வாதியர், வேத வாதியர் முதலிய பற்பல சமயவாதிகளை யணுகி, அவர்கள் கொள்கைகளை யெல்லாம் ஐயந்திரிபற உள்ளங்கை நெல்லிக்கனி போல் அறிந்துகொண்டாள்.

---

* இந்திர விகாரம்—இந்திரனால் அமைக்கப்பட்ட அரங்குகள். இவை ஆகாயவாசிகள் மறைந்திருந்து பௌத்த தருமங்களை உயிர்களுக்கு உபதேசித்தற்குரிய விடம் என்பார்.

## 28. மணிமேகலை கச்சிமாநகர் புகல்

அவ்வாறறிந்த மணிமேகலை மாதவி, சுதமதி, அறவண வடிகள் என்னும் இவர்களைக் காண விரும்பி அவ்வஞ்சி நகரில் பௌத்த முனிவர்கள் வசிக்கும் தவச்சாலையை யணுகினள். பின்பு அவள் அங்கே தவஞ் செய்து கொண்டிருந்த கோவலன் தந்தையாகிய மாசாத்துவானைக் கண்டு வணங்கி, "ஐயனே! என் கையிலிருப்பது அமுதசுரபி யென்னும் பாத்திரம்; இது தெய்வத் தன்மை வாய்ந்தது: இதிலிருந்து எடுக்குந்தோறும் அன்னம் குறைவின்றிப் பெருகிக் கொண்டே வரும். இதைக் கொண்டு நான் பல எளியவர்களை நாள் தோறும் ஆதரித்து வருகிறேன். முன்பு இப்பாத்திரத்தைக் கொண்டு ஆபுத்திரன் என்னு மிளைஞனொருவன் பலர் பசிப்பிணியைப் போக்கினன். அதனாலவனிப்போது புண்ணிய ராசனெனப் பேர் பெற்றுச் சாவகநாட்டை யாண்டு வருகிறான். நானவ்வேந்தனை மணிபல்லவத்திற் கழைத்துச் சென்றேன். அவன் அங்கே புத்த பீடத்தைத் தொழுது தன் பழம்பிறப்பை யுணர்ந்து தன்னிருப்பிடம் போய்ச் சேர்ந்தான். காவிரிப்பூம் பட்டினம் கடலில் முழுகினதாகவும் அதனால் மாதவி, சுதமதி, அறவணவடிகள் என்னும் இம்மூவரும் இவ்வஞ்சிமாநகர மடைந்ததாகவும் தீவதிலகை என்னுந் தெய்வம் எனக்குச் சொல்லிற்று; அதனால் நானிங்கு வந்தேன். பின்பு நான் வேற்றுருக்கொண்டு பலவகைப் பட்ட சமய வாதிகளை யணுகி அவர்கள் கொள்கைகளை யுணர்ந்தேன். அவை யெல்லாம் தகுதி யுடையனவாய்த் தோன்றவில்லை. அதனால் நான் பௌத்த தருமத்தைக் கேட்க விரும்பி அறவணவடிகளைத் தேடி வந்தேன்" என்றாள்.

மாசாத்துவான் இவற்றை யெல்லாங் கேட்டு மகிழ்ந்து, "தூய குணமுடையாய்! என் நல்வினைப் பயனால் நானுன்னைக் கண்டேன். உன் தந்தை கோவலன் வெட்டுண்டான். உன் தாய் கண்ணகி அவன் பொருட்டு மதுரையை யழித்துத் தானும் உயிர் துறந்தாள். இச் செய்தியை மாடலனென்னும் மறையவன் ஒருவனால் நான் கேள்வியுற்றேன். உடனே நான்,

"மனைத்திற வாழ்க்கை மாயமென் றுணர்ந்து
தினைத்தனை யாயினுஞ் செல்வமும் யாக்கையும்
நிலையா வென்றே நிலைபெற வுணர்ந்தே
மலையா வறத்தின் மாதவம் புரிந்தேன்"

அவ்வாறு தவஞ்செய்யத் தொடங்கிய நான் புத்ததேவனது கோயிலைத் தரிசிக்கக் காவிரிப்பூம் பட்டினத்தை விட்டு இங்கு வந்தேன். இங்குள்ள முனிவர்கள், அப் பட்டினம் சில நாளில் கடலால் கொள்ளப்படுமென உறுதியாய்க் கூறினர். அதனால் நான் மீண்டுமங்குச் செல்லாமல் இங்கேயே இருந்துவிட்டேன். அறவணவடிகள் உன் வாலாறு முற்றும் எனக்கு எடுத்தோதினர். அவர் இப்போது கச்சிமாநகரம் போயிருக்கிறார். உனக்குத் தருமோபதேசம் செய்ய அதுவே தக்கவிடமென அவர் கருதினர். மாதவியும், சுதமதியும் அவருடன் சென்றிருக்கின்றார்கள். கயல் கண் மாதே! இன்னுங்கேள். காஞ்சிமா நகரில் சில வருஷங்களாய் மழை பொழியவில்லை. அதனால்அங்கே பெரும் பஞ்சந் தோன்றிப் பல உயிர்களை மடித்து வருகிறது. அந்நகரிலுள்ள மாதவர்க்கும் அங்கு உணவு கிடைக்காமையால், அவர்களும் இங்கே வந்து விட்டனர். ஆதலால், நீ விரைந்து சென்று அங்குள்ள உயிர்களை ஆதரிப்பாயாக" என்றான்.

அப்பால், மணிமேகலை அங்கு நின்று மகன்று ஆகாய வழியாய்க் காஞ்சிமா நகாமணுகினள். அது செல்வ மிழந்து சீர் கேடாயிருப்பதைக் கண்டு அவள் மிகவுங் கலங்கினள். பின்பு அவள் தொடுகழற்கிள்ளியின் தம்பி யாகிய இளங்கிள்ளி யென்பவனல் கட்டப்பட்ட புத்த தேவனது கோயிலை வணங்கி, அதனருகிலுள்ள ஒரு சோலையில் போய்த் தங்கினள். அப்போது அந்நாட்டு வேந்தன் பணியாளர்களி லொருவன் அம்மன்னவனை யணுகி, "வெண்குடை வேந்தே! சிறந்த தவவொழுக்க முடையவளும், கோவலன் மகளுமாகிய ஒருத்தி நமது தரும வனத்தில் வந்து தங்கி யிருக்கிறாள். அவள் தன் கையில் அமுதசுரபியென்னும் பாத்திர மொன்றை வைத் திருக்கிறாள்." என வியம்பினன்.

உடனே அம்மன்னவன் முன்பு சுந்திற்பாவை தனக் குச் சொன்னதை நினைத்துத் தனது மந்திரிகளுடன் மணி மேகலையை யணுகி, "தவச்செல்வி! எனது நாடு முற் றும் பசியாலும் பிணியாலும் வறுமையாலும் வருந்து கிறது. இதற்குக் காரணம் என் அரசாட்சியின் கொடு மையோ? நான் முற்பிறப்பில் செய்த தீவினையோ? அறி யேன். சில நாட்களுக்கு முன் ஒரு தெய்வம் என்னெதி ரில் வந்து என்னை நோக்கி, மன்னவ! நீ சிறிதும் வருந் தாதே. நீ செய்த நல்வினைப் பயனல். ஒரு தவப் பெண் உன் நாட்டை வந்தடைவாள். அவள் கையிலுள்ள பாத் திரத்தால் உன் நாட்டிலுள்ளார் அனைவரும் பசியொழிந்து இன்பமடைவார். அவள் கருணையால் பருவமழை தவறா மல் பெய்யும். நீ கோமுகிப் பொய்கையும் அதனையுடைய மணிபல்லவச் சோலையும் போல, ஒரு பொய்கையும் அதனைச் சூழ்ந்ததோர் சோலையும் அமைக்க" எனச் சொல்

லிப் போயிற்று. பின்பு நான் அதன்படியே செய்து முடித்தேன்" என மொழிந்து மணிமேகலையை யழைத்துப் போய் அச்சோலையையும் அதனிடையில் பொலிவுறும் தடாகத்தையும் காட்டினன்.

பின்பு மணிமேகலை அப்பொழிலில் புத்த பீடத்தையும், தீவதிலகை மணிமேகலா தெய்வம் என்னுமிருவர்க்கும் இரண்டு கோயில்களையும் கட்டும்படி அவ்வரசனுக்குக் கட்டளை யிட்டனள். அவனவ்வாறே அவற்றை யேற்படுத்தினன். அதன் பிறகு மணிமேகலை தன் கையிலுள்ள அமுத சுரபியை அப்புத்த பீடத்தின் மேல் வைத்துப் "பசியால் வருந்துபவ ரெல்லாம் வாருங்கள்" எனக் கூவினள். உடனே,

> "மொய்த்த மூவறு பாடை மாக்களில்
> காணார், கேளார், கான்முட மானோர்,
> பேணா மாக்கள், பேசார், பிணித்தோர்,
> படிவ நோன்பியர், பசிநோ யுற்றோர்,
> மடிநல் கூர்ந்த மாக்கள் யாவரும்"

திரள் திரளாய் வந்து கூடினர். இம்மட்டோ! பலவகையாகிய விலங்கு, பறவை முதலிய உயிர்களும் வந்து சேர்ந்தன. எல்லோரும் தம் பசிப்பிணி யொழியும்படி வயிறாரவுண்டு மணிமேகலையை வாழ்த்திச் சென்றனர். அந்த நல்வினைப் பயனால், அந்நாட்டில் நல்ல மழை பெய்ய உயிர்களெல்லாம் வறுமை நீங்கி இன்ப மடைந்தன. அப்போது அறவணவடிகள் மணிமேகலையைக் காண விரும்பி மாதவி சுதமதி என்னு மிருவருடன் அங்கு வந்தனர். உடனே மணிமேகலை அவரை வணங்கி அவருக்கு இனிய அமுது படைத்தனள்.

---

## 29. மணிமேகலை தவவொழுக்கம் பூண்டு தருமங் கேட்டல்

அறவணவடிகள் உண்ட பின்பு, மணிமேகலை அவரை மீண்டும் வணங்கினாள். அப்போது அவர் அவளை நோக்கி, "மின்னல் போல் விளங்கும் மேனியாய்! வளையணன் மகளாகிய பீலிவளை யென்பவள் நெடுமுடிக் கிள்ளியைச் சேர்ந்து ஓராண் மகவைப் பெற்றனள். அவள் அவ்விளங் குழந்தையைக் கம்பளச்செட்டி யென்னும் வணிகனிடம் கொடுத்து அதை அம்மன்னவனிடம் கொடுக்கச் சொன்னாள். அவன் அவ்வாறே அக்குழவியை யெடுத்துக் கொண்டு மரக்கலமேறி வருகையில், நடுவழியில் அக்கப்பல் முழுகி விட்டது. தப்பிப் பிழைத்த சிலர் இதனை அம் மன்னவனுக்கு அறிவித்தனர். அவன் தன் புதல்வன் மேலுள்ள காதல் மிகுதியால் அவனைப் பல இடங்களில் தேடித் திரிந்தான். அப்போது காவிரிப்பூம் பட்டினத்தி லுள்ள மாந்தர்கள் இந்திரவிழாவை மறந்தனர். அதனால் மணிமேகலா தெய்வமும், தேவேந்திரனும் பெருங்கோபங் கொண்டு அந்நகரைக் கடல் கொள்ளும்படி சபித்தனர். அவ்வாறே அந்நகரம் அழிந்து போயிற்று. அப்பால் உன் பொருட்டு நானும் உன் தாயும் இந்நகர மடைந் தோம்" என்றனர்.

பின்பு மணிமேகலை அவரை வணங்கி, "அருட் கடலே! இதனை மணிபல்லவத்தில் தீவதிலகை எனக்கு முன்பே மொழிந்தாள். நிற்க, நான் வேற்றுருவத்துடன் வஞ்சிமாநகரம் புகுந்து பற்பல சமயவாதிகளின் கொள் கைகளை யெல்லாம் நன்கறிந்தேன். அவை யனைத்தும் பொருத்த முடையனவாய்த் தோன்றவில்லை. இனித் தாங் கள் மெய்ப் பொருளை யுணர்த்துதல் வேண்டும்" என

வேண்டி நின்றாள். அவர் அவ்வாறே அவளுக்குப் புத்த மதக் கொள்கைகளைத் தெளிவாய்க் கூறினர்.

---

## 30. மணிமேகலை பிறவிப்பிணி யொழிய நோற்றல்

அவ்வாறு உபதேசம் பெற்ற மணிமேகலை, பின்பு * 'புத்தம் சரணம் கச்சாமி' † 'தர்மம் சரணம் கச்சாமி' ‡ 'சங்கம் சரணம் கச்சாமி' என்னும் மந்திரங்களைக் கூறி, அறவணவடிகளை வழிபட்டனள். அப்பால், அவர் மணிமேகலையை நோக்கி, "தவச்செல்வி! முன்பு ஒரு காலத்தில் உலகத்திலுள்ள உயிர்களெல்லாம் அறிவிழந்திருந்தன. அப்போது தேவர்கள் துடிதலோகத்திலுள்ள இறைவனை வழிப்பட்டனர். அவர் அந்தத் தேவர்களின் வேண்டுகோளுக் கிணங்கி இம்மண்ணுலகில் தோன்றிப் போதி மரத்தின் கீழ் வீற்றிருந்து அறநெறியை உயிர்களுக்கு உபதேசித்தனர். அவ்வுபதேச மொழிகளே இப்போது நானுனக்கு மொழிந்தவை யாம். முன்பு தோன்றிய பற்பல புத்தர்கள் தமது கருணைப் பெருக்கால் மொழிந்தனவும் இவையேயாம். இவற்றை நீ மறவாமல்

---

* புத்ததேவனைச் சரணமாக அடைகிறேன் என்பது.

† தர்மத்தைச் சரணமாக அடைகிறேன் என்பது.

‡ புத்தசங்கத்தைச் சரணமாக அடைகிறேன் என்பது.

புத்தசங்கமாவது—புத்தர்களில் துறந்தவர்களின் கூட்டம். இவர்கள் ஒரு கூட்டத்தில் பத்துப் பேருக்குக் குறையாமலிருப்பர். ஆண், பெண் ஆகிய இருபாலாரும் வெவ்வேறிடங்களில் வசிப்பர். துறந்தவர்களில் ஆண் பாலார் பிக்ஷுக்களென்றும், பெண் பாலார் பிக்ஷுணிகளென்றும் சொல்லப்படுவார். பிக்ஷுக்களுக்குப் பிக்ஷுணிகள் அடங்கி நடத்தல் வேண்டும்.

சிந்தித்து வருவாயாக" எனக் கூறினர். அவளவ்வாறே அவற்றை இடைவிடாமல் தியானித்து 'பிறவிப் பிணி யொழிவதாக' என நோற்று முடிவில் முத்தி யெய்தினள்.

---

# அரும்பத வுரை

---

### 1-ம் பக்கம்

'நிலமகள் முகமோ' என்னுஞ் செய்யுள்:—

திலகம் = நெற்றிப் பொட்டு
மங்கல நாண் = தாலிக் கயிறு
இலகு பூண் = விளங்கும் ஆபரணங்கள்
ஆரம் = (ரத்தின) மாலை
இருக்கை = இருப்பிடம்
திருமகள் = இலக்குமி
நன் மணிகள் = சிறந்த (கௌஸ்துபம்) முதலிய ரத்தினமாலைகள்
வானோர் = தேவர்கள்
ஊழியின் இறுதி = யுகத்தின் முடிவு; பல்லாயிர வருஷங்கள் கொண்டது ஒரு யுகமென்பர்
உறையுள் = இருப்பிடம்
பகுதி = பிரிவு

### 2-ம் பக்கம்

வழித்தோன்றியவர் = வமிசத்திற் பிறந்தவர்
சான்றோர் = பெரியோர்
'இரக்கமென்று' என்னுஞ் செய்யுள்:—
இரக்கம் = கருணை
அறத்தின் = தருமத்தினின்று
நெருக்க = வருத்த
படர் நெறி = செல்லுதற்குரிய நல் வழிகள்
அலா நெறி = தீய வழி
தூக்க = செலுத்த
அரும் தவம் துறை = அரிய தவ வழி
பாதுகாப்பு = காவல்

### 3-ம் பக்கம்

செம்பியன் = சோழன்
எய்துவாய் = அடைவாய்
மரபு = குலம்

### 4-ம் பக்கம்

துகில் கொடி = துணியால் செய்யப்பட்ட கொடிகள்
கமுகு = பாக்குமரம்
மகர தோரணம் = சுறா மீன் வடிவமாய்ச் செய்யப்பட்ட தோரணம்
அணிகள் = ஆபரணங்கள்

### 5-ம் பக்கம்

திரள் திரளாய் = கூட்டங்கூட்டமாய்
வியந்து = அதிசயித்து
தூய்மை = பரிசுத்தம்

### 6-ம் பக்கம்

'காதலரிறப்பின்' என்னுஞ் செய்யுள் :—
கனை எரி = மிகுதி யாகிய நெருப்பு
பொத்தி = மூட்டி
உலை ஊது குருகின் = (கொல்லனது) உலைக்களத்தில் ஊதப்படும் துருத்தியைப் போல
உயிர்த்து = பெருமூச்சு விட்டு
அகத்து = மனத்தில்
பொய்கை = தடாகம்
நளி எரி = மிகுதியாகிய நெருப்பு
நோற்று = விரதங் கிடந்து
அடுவர் = வருத்துவர்

### 7-ம் பக்கம்

'பிறந்தோருறுவது' என்னுஞ் செய்யுள் :—
உறுவது = அடைவது
பற்றின் = ஆசையால்
அற்றோர் = (ஆசையை) ஒழித்தவர்
ஏனைய = மற்ற

### 8-ம் பக்கம்

'ஊழிற் பெருவலி' என்னுஞ் செய்யுள் :—
ஊழ் = முற்பிறப்பில் செய்த வினை
யா உள = (வேறு) என்ன உண்டு
சூழினும் = ஆலோசித்தாலும்
பொழில் = சோலை
பெண் அரும் கலம் = பெண்களுக்குச் சிறந்த ஆபரணம் போன்றவள்

### 9-ம் பக்கம்

இன்னல் = துன்பம்
கட்டழகு = குலையாத அழகு
நறு மலர் = மணமுள்ள மலர்
ஒருங்கே = ஒன்றாய்
இத்தகைய = இப்படிப்பட்ட

### 10-ம் பக்கம்

பதும பீடம் = தாமரை மலர் போன்ற பீடம்
கருணாகரன் = கருணைக்கு இருப்பிடமானவன்
இன் இசை = இனிய ராகம்
வேய்ங்குழல் = மூங்கில் குழல்
யாழ் = வீணை
அபிநயம் = மனத்திலுள்ள விஷயத்தைக் கையால் குறிப்பித்து நடித்தல்

### 11-ம்—பக்கம்

மகர தோரணம் = சுறுமீன் வடிவமாய்க் கட்டப்பட்ட தோரணம்
வற்புறுத்தி = கட்டாயப்படுத்தி
இயல்பு = அழகு
கண்டோ = கற்கண்டோ
காரிகை = பெண்

### 12-ம் பக்கம்

தருக்கள் = மரங்கள்
மந்திகள் = பெண் குரங்குகள் ; இதன் ஆண்பால் கடுவன்
ஆரவாரம் = பேரொலி

'ஆழம் புணரி' யென்னுஞ் செய்யுள் :—

புணரி = கடல்
சூழ் = சுற்றிலுமுள்ள விடங்கள்
துறை = நீர்க்கரை
நீலம் = நீலோற்பல மலர்கள்
கயல் = ஒருவகை மீன்
கின்னா மிதுனம் = கின்னரப் பறவையின் ஆணும் பெண்ணும்

'ஒருபால் வளர்' என்னுஞ் செய்யுள் :—

போதா நிரை = ஒருவகை நாரைகளின் வரிசை
நேமிகள் = சக்கரவாளப் பறவைகள்
ஒருபால் = ஒருபக்கம்
புனல் அரமங்கையர் = நீரரமங்கையர்; நீரில் வசிக்கும் தெய்வப் பெண்களென்பது
நந்து = சங்குகள்
புளினம் = மணல் மேடுகள்
செறிந்து = நிறைந்து

## 13-ம் பக்கம்

நாடகக் கணிகையர் = நடனஞ் செய்யும் வேசிப் பெண்கள்
கலாபம் = மயிலின் தோகை
பங்கயம் = தாமரை
பண்கள் = இராகங்கள்
விழைந்து = விரும்பி
பரிவாரம் = சேனை
பாசம் = தளை ; சங்கிலி
பிணிக்க = கட்ட
பிளிறம் = வீறிடும்
வெருவல் = பயப்படல்

## 14-ம் பக்கம்

காவலன் = அரசன்
கடிதாய் = விரைவாய்
பைந்தொடி = பசுமை யாகிய வளையலை யணிந்தவளே

## 15-ம் பக்கம்

திருமகள் = இலக்குமி
கவல = வருந்த
புறத்தே = வெளியில்
குழாம் = கூட்டம்
உளைந்து = வருந்தி
செப்பலுற்றனள் = சொல்லத் தொடங்கினாள்
மூதாதை = பாட்டன்

## 16-ம் பக்கம்

முதியவர் = பெரியோர்
மாறுபட்டு = விரோதப்பட்டு
அரியாசனம் = சிங்காசனம்
பிறழாமல் = தவறாமல்
வியப்பு = அதிசயம்
தீவினை = பாவம்
புனையா விட்டால் = அணியா விட்டால்
எய்தி = அடைந்து
மரிக்கும் = இறக்கும்

## 17-ம்பக்கம்

உறைவிடம் = இருப்பிடம்
சுண்ணம் = வாசனைப் பொடி

'துடருங் கொழுவும்' என்னுஞ் செய்யுள் :=

கொழு = கொழுப்பு
குருதி = இரத்தம்
என்பு = எலும்பு

தடி = மாமிசம்
வழும்பு = நிணம்
எத்திறத்தள் = எப்படிப் பட்ட தன்மை யுடையவள்
ஈர்ங் கோதையாள் = குளிர்ந்த மலர் மாலையை யணிந்தவள்.
'பண்ட மறியார்' என்னுஞ் செய்யுள் :—
பண்டம் = உடம்பு
சாந்து = சந்தனம்
கோதை = மலர் மாலை
பாராட்டுவார் = உயர்வாக நினைப்பவர்
மண்டி = நெருங்கி
பேர்த்திட்டு = இழுத்து
முடை = தீய நாற்றம்
சாகாடு = வண்டி
அச்சு இற்ற உழி = அச்சு முறிந்து அழிந்த காலத்தில்
யாக்கை = உடம்பு

19—ம் பக்கம்

ஒழுக்கம் = நன்னடக்கை
கொணர்ந்து = கொண்டு வந்து

21—ம் பக்கம்

வேதியர் = பிராமணர்
இல்லங்கள் = வீடுகள்
இரந்து—பிச்சையெடுத்து
கோடுகள் = கொம்புகள்
சீற்றம் = கோபம்

22-ம் பக்கம்

தரும்பும் = வழியும்
வள்ளல் = தயாள குணமுள்ளவன்
துலங்கும் = விளங்கும்
இடுக்கண் = துன்பம்

23-ம் பக்கம்

சரண கமலம் = பாதமாகிய தாமரை
மிளிரும் = விளங்கும்
இயல்பு = தன்மை
அறைந்தனள் = சொன்னாள்
மடந்தை = பெண்
'புலவன் தீர்த்தன்' என்னுஞ் செய்யுள் :—
புலவன் = அறிவையுடையவன்
தீர்த்தன் = பரிசுத்தமானவன்
என்கோ = என்று சொல்வேனோ
செற்றம் = கோபம்
செறுத்தோய் = ஒழித்தவனே
கடந்தோய் = வென்றவனே
ஏமம் = காவல்
தீ நெறி = கெட்ட வழி

25-ம் பக்கம்

'வண்டா யயன்' என்னுஞ் செய்யுள்
அயன் = பிரமன்
நான் மறை = நான்கு வேதங்கள்
பண்டு = முன்பு
மிசை = மேலே
பார் = உலகம்
உண்டான் = உண்டவனாகிய திருமால்
ஓதம் = குளிர்ச்சி
ஆழி = கடல்
வெண் திங்கள் = வெண்மையாகிய சந்திரன்
கீழ்த் திசை = கிழக்குத் திக்கு
தண் கதிர் = குளிர்ந்த கிரணங்கள்

26-ம் பக்கம்

தீத்தொழில்=கெட்டசெய்கை
அரிவையர்=பெண்கள்
'பிணங்கள் கூடும்' என்னுஞ்
செய்யுள் :—
கடும் புலையர்=கொடிய இழி
 தொழில் செய்வோர்
ஆரவம்=ஓசை
அமலை=ஓசை
நிணம்=கொழுப்பு
முடை=தீய நாற்றம்
நெடுங்கனல்=மிகுதியாகிய
 நெருப்பு
நிவப்பு=உயர்ச்சி
கணங்கள்=(பேய்) கூட்டங்கள்
துழனி=ஓசை
கனல்=நெருப்பு
மலிவு=மிகுதி
ஞமலி=ஆண் நாய்கள்; இத
 பெண்பால் முடுவல் [ன்
பிணங்கல்=(ஒன்றோடொன்று)
 சண்டையிடல்
குரைப்பு=ஓசை

27-ம் பக்கம்

வெருண்டு—பயந்து
நிகழ்ந்தவற்றை=நடந்தவற்றை

28-ம் பக்கம்

கூர்ந்து=மிகுந்து
நீத்தான்=நீங்கினுன்
ஆற்றல்=வல்லமை

29-ம் பக்கம்

பொழுது புலர்ந்ததும்=
 பொழுது விடிந்ததும்
'மூன்னர்த் தோன்றி' என்னுஞ்
 செய்யுள் :—
கோன் நிலை=அரசநீதி
திரிந்திடில்=மாறுபட்டால்
கோள் நிலை=நவக்கிரகங்களின்
 நிலைமை
மாரி வறம் கூரும்=பருவ மழை
 பெய்யாமல் பொய்க்கும்
மன்னுயிர்=நிலைபெற்ற உயிர்
 கள்
தகுதி=தன்மை
ஒழுகுதல்=நடத்தல்

30-ம் பக்கம்

செயல் அற்று=செய்கை நீங்கி
பரதபிக்க=திகைத்து வருந்த
ஆற்ருது=பொருமல்
நள்ளிருள்=நிறைந்த இருள்
துடி=ஒருவகைப் பறை
கறங்கிற்று=ஒலித்தது
'அள்ளிக் கொளலாய்' என்
 னுஞ் செய்யுள்:—
ஒன்ருய்த் திரண்டு=ஒன்ருய்ச்
 சேர்ந்து
விள்ளாத=நீங்காத
கூர் இருள்=மிகுதியாகிய இருள்
உள்ளம்=மனம்
புதைய வைத்த =(பிறருக்குத்
 தோன்ருமல்) மறைத்து
 வைத்த
இதயம்=மனம்
பொது மகளிர்=வேசிகள்

31-ம் பக்கம்

பாவை=பொம்மை
மை தட கண்ணய்=மை பூசிய
 பெரிய கண்களையுடையவளே
தோன்றினீர்=பிறந்தீர்

மது=கள்
இறைவன்=அரசன்

32-ம் பக்கம்

கௌஸ்துபம் = உயர்ந்த ரத்தினம்

33-ம் பக்கம்

நீர்த்துறைகள்=நதி, வரி, குளம் முதலியவற்றின் கரைகள்
பீடிகை=பீடம் ; ஆசனம்

34-ம் பக்கம்

தீர்க்க தண்டன் செய்தல்=நேராய் விழுந்து வணங்கல்
பூ கம்பம்=பூமியதிர்ச்சி
கேடு எய்தும்=அழிவடையும்
மொழிந்தீர்=சொன்னீர்
முத்தி நெறி = மோக்ஷத்திற்குரிய வழி

35-ம் பக்கம்

உதித்த=பிறந்த
உணர்த்த=தெரிவிக்க

36-ம் பக்கம்

பேறு=பாக்கியம்
கேள்வன்=கணவன்
அணங்கு=தெய்வப் பெண்
வெகுண்டான்=கோபித்தான்

37-ம் பக்கம்

வேட்கை=விருப்பம்
பாதச் சுவடு=பாதத்தின் அடையாளம்
அறத்தின் தன்மை = தருமங்களின் இயல்புகள்

38-ம் பக்கம்

கொள்கைகள் = அபிப்பிராயங்கள்
தொகுதி=கூட்டம்

39-ம் பக்கம்

பிறை நுதால் = சந்திரனைப் போன்ற நெற்றியையுடைய பெண்ணே !
அளவு அற்ற=கணக்கில்லாத
'குடிப் பிறப்பு' என்னுஞ் செய்யுள் :—
குடிப்பிறப்பு = (உயர்வாகிய) குடியிற் பிறத்தலாலாகிய மேன்மை
விழுப்பம்=பெருமை
பெரும் புணை=பெரிய தெப்பம்
விடுஉம்=அழிக்கும்
நாண் அணி=மானமாகிய ஆபரணம்
களையும்=ஒழிக்கும்
மாண் எழில்=பெருமையாகிய அழகு
சிதைக்கும்=அழிக்கும்
பூண் அணி மாதர்=ஆபரணங்களையணிந்த பெண்கள்
இசை=கீர்த்தி
என் நா நிமிராது=எனது நாக்கு எழாது

41-ம் பக்கம்

வண்மை = (பிறர் விரும்பிய பொருளைத் தடையின்றி) கொடுக்குங் குணம்
தாளாண்மை=முயற்சி
காமுறுதல்=விரும்புதல்

தபோசிதி = தவமாகிய செல்வத்தையுடையவர்

### 42-ம் பக்கம்

அநுமதி = உத்தரவு
நின்பால் = உன்னிடம்
பொய்கை = தடாகம்
முப்பகை = மூன்று பகைகள்; அவை:—காமம், வெகுளி, மயக்கம் என்பன.
மதக்களிறு = மதத்தையுடைய யானை

### 43-ம் பக்கம்

'ஆடகச் செம்பொன்' என்னுஞ் செய்யுள் :—

ஆடகம் செம் பொன் கிண்ணம் = ஆடக மென்னும் உயர்ந்த பொன்னால் செய்யப்பட்ட கிண்ணம்; ஆடகம் நால்வகைப் பொன்னில் ஒன்று. மற்ற மூன்றுவன:— கிளிச்சிறை, சாதகம், சாம்பூநதம் என்பன.
அலங்கல் தெண்ணீர் = அசையும் தெளிவாகிய நீர்
கூடு அகம் கொண்ட = உடம்பில் கொண்ட
வாழ் நாள் = ஆயுள்
உலர்ந்தேல் = முடிந்தால்
பௌவத்து ஊடு அகம் = கடலின் நடுவில்
புக்கு = புகுந்து
முந்நீர் = கடல்
அழுந்தினும் = முழுகினாலும்
உய்வர் = (தப்பி) பிழைப்பர்
நல்லார் = பெண்கள்
பாடகம் = (பெண்கள் தமது காலிலணியும்) ஒருவகை ஆபரணம்
பழ வினை பயத்தின் = முற்பிறப்பில் செய்த தீவினைப் பயனால்

### 44-ம் பக்கம்

மறையவன் = வேதங்களை யோதுபவன்; பிராமணன்
பரிவாய் = அன்பாய்
கலைகள் = நூல்கள்
நடு நிசி = நடு ராத்திரி
கவர்ந்து = அபகரித்து

### 45-ம் பக்கம்

முது மறை அந்தணர் = பழமையாகிய வேதங்களை யுணர்ந்த பிராமணர்
'ஆன் மகன்' என்னுஞ் செய்யுள் :—
ஆன் = பசு
புரையோர் = மேலோர்
அழி குலம் = இழிவாகிய குலம்

### 46-ம் பக்கம்

கண்ணுற்றேன் = பார்த்தேன்
மகவு = குழந்தை
'மாமறை மாக்கள்' என்னுஞ் செய்யுள் :—
மா மறை = சிறந்த வேதங்கள்
மாக்கள் = பகுத்தறிவில்லா மிருகங்களைப் போன்றவர். பசுவை வதைக்கக் கருதினமையாலும் தன்னைப் பலவாறு வருத்தி

னமை யாலும் ஆபுத்திரன் அவர்களை 'மாக்கள்' என விளித்தனன்.
முது மறை முதல்வன் = பழமையாகிய வேதங்களுக்குத் தலைவன் ; பிரமன்
கடவுள் கணிகை = தேவதாசி, திலோத்தமை
அந்தணர் இருவர் = வசிஷ்டரும் அகஸ்தியரும்

47-ம் பக்கம்

இரந்தனர் = வேண்டினர்

48-ம் பக்கம்

வறிய = எளிய
பருவம் = காலம்

49-ம் பக்கம்

செருக்கு = களிப்பு
கடிது சென்று = வேகமாய்ப் போய்
மரக்கலம் = கப்பல்

50-ம் பக்கம்

இனிது = நன்ருய்
நல் நிமித்தம் = நற்சகுனம்
கந்திற் பாவை = தூணில் அமைக்கப்பட்ட பதுமை.

51-ம் பக்கம்

மகப் பேறு = புத்திர பாக்கியம்
பிக்ஷுணி = பௌத்த மதத்தைத் தழுவி (எல்லாவற்றையும்) துறந்தவள்; இதன் ஆண்பால் பிக்ஷு

52-ம் பக்கம்

நன்காய் = பெண்ணே
கொழுநன் = கணவன்
கணிகை = வேசி
வட்டு = ஒருவகைச் சூதாட்டம்
திரண்ட = ஏராளமான

53-ம் பக்கம்

இசைத்தனர் = சொன்ஞர்
கடு மொழி = கொடுஞ் சொல்
கூறை = புதிய ஆடை
அசரீரி = அ + சரீரி ; சரீரமில்லாதது; சரீரந் தோற்றுவியாமல் சொற்களை மாத்திரம் தெரிவிக்கும் ஒருவகைத் தெய்வம்; இதனை 'ஆகாயவாணி' யெனவுங் கூறுவர்.
நாசர்கள் = இங்கு ராக்ஷஸத் தன்மைபொருந்திய ஒரு வகை ஜாதியாரைக் குறித்தது.

54-ம் பக்கம்

உண்டி = உணவு
'மயக்குங் கள்ளும்' என்னுஞ் செய்யுள் :—
மயக்கும் கள் = அறிவை மயங்கச் செய்யும் கள்
கோறல் = கொல்லுதல்
கயக்கு அறு மாக்கள் = இழிவகன்ற பெரியோர்
கடிந்தனர் = விலக்கினர்
அல் அறம் = பாவம்
உரவோர் = அறிவாளிகள்
களைந்தனர் = ஒழித்தனர்
விவாதம் = வழக்கு
எற்ற விடை = தக்க பதில்

55-ம் பக்கம்

துகில்=வஸ்திரம்
பரிசு=இனும்
சான்ருேர்=பெரியோர்

56-ம் பக்கம்

செருக்கு=கர்வம்
சிதைத்தேன்=அழித்தேன்
சீற்றம்உற்ற=கோபங்கொண்டு

57-ம் பக்கம்

செவி உற்றனள்=கேட்டாள்
வெதும்பி=குழம்பி; வருந்தி

58-ம் பக்கம்

உணர்த்தினன் = தெரிவித்தனன்
செங்கோல் மன்னர் = நீதி தவருமல் அரசாட்சி செய்யும் அரசர்
இருத்தல்=நிலை நிறுத்தல்
யாசிக்கும்=பிச்சை யெடுக்கும்

59-ம் பக்கம்

மூத்தலும் = கிழப்பருவ மடைதலும்
இரங்கல்=தளர்ச்சி யடைதல்
இடும்பை=துன்பம்
கொள் கலம்=கொள்ளும் பாத்திரம்

60-ம் பக்கம்

பார்த்திபன்=அரசன்
காரிகை=பெண்

61-ம் பக்கம்

மாதே=பெண்ணே
வாய்ந்தது=பொருந்தியது
அறச் சாலை=தரும சத்திரம்
எறிதல்=வெட்டல்

62-ம் பக்கம்

ஆண்டு=வருஷம்
ஆருயிர் போல்வாய் = சிறந்த உயிர் போன்றவளே
வழங்கினர்=கொடுத்தார்
பொருள் படுத்தாமல் = மதியாமல்
'பூவினும் சாந்தினும்' என்னுஞ் செய்யுள் :—
சாந்து=சந்தனம்
புலால்=கெட்ட வாசனை
துகிலினும் அணியினும்=ஆடையாலும் ஆபரணங்களாலும்
தொல்லோர்=முன்னோர்
வகுத்த=ஏற்படுத்திய

64-ம் பக்கம்

தணிபாதவன்=அடங்காதவன்
நடு யாமத்து=நடு ராத்திரியில்
துணித்து=வெட்டி

65-ம் பக்கம்

நெறி=வழி
சாயை=நிழல்
சிறு தொழில் = இழிவாகிய காரியம்
மடைத் தொழிலாளன்=சமையல் வேலை செய்பவன்
ஆராயாமல்=ஆலோசியாமல்
வதைத்தமை=கொன்றமை

66-ம் பக்கம்

'பிறந்தோ ரிறந்தல்' என்னுஞ் செய்யுள்.
அறம் தரு சால்பும் = தருமத்தால் உண்டாகும் மேன்மை
மறம்=பாவம்
இடர் வினை = துன்பமாகிய தொழில்
குறுகல்=நெருங்கல்

67-ம் பக்கம்

செவ்வரி=சிவந்த கோடுகள்
நெடுங் கண்ணாய்=பெரிய கண்களை யுடைய பெண்ணே
அறம் நெறி=தரும மார்க்கம்

69-ம் பக்கம்

திரட்டி=ஒன்று சேர்த்து
இன்மையால்=இல்லாமையால்

70-ம் பக்கம்

த[illegible] இழைக்க=குற்றம் புரிய
வழிபட்டு=வணங்கி
குன்றி=குறைந்து
தடிந்து=வெட்டி

71-ம் பக்கம்

கந்தருவ மணம் = பெற்றோர் கட்டளையின்றி ஆணும்பெண்ணும் தமக்குள மனமொத்துச் செய்து கொள்ளும் மணம். இதனை யாழோர் கூட்டமெனவும் சொல்வார்.
தூற்றல்=பலரறியும்படி சொல்லல்
பத்தினி=மனைவி
புத்தேள்உலகம்=தேவலோகம்

72-ம் பக்கம்.

கன்னிகா மடம் = மணப்பருவமடைந்த பெண்கள் தனியாய் வசிப்பதற்குக் கட்டப்பட்ட மாளிகை.
தீச் செயல்கள் = கெட்ட காரியங்கள்

73-ம் பக்கம்.

தோன்றினன்=பிறந்தான்
மூதாட்டி=கிழவி; அறிவிற் சிறந்தவளெனினுமாம்

74-ம் பக்கம்.

சூழ்ச்சி=உபாயம்
கீழ்மகன்=அற்பன்
இசைந்து=சம்மதித்து
ஓதி=சொல்லி
அந்தப்புரம் = பெண்கள் தனியாய் வசிப்பதற்குரிய மாளிகை; இதனை உவளகம் எனவுங் கூறுவர்
புழுக்கறை = வாயிலில்லாத அறை

75-ம் பக்கம்.

பொன் போல்வாய் = இலக்குமியைப் போன்றவளே

76-ம் பக்கம்

துறக்க=நீக்க
பயந்தவள்=பெற்றவள்

78-ம் பக்கம்.

துயர் உறுவது = கவலையடைவது.

79-ம் பக்கம்.

தவச் செல்வர் = தவத்தைச் செல்வமாக உடையவர்
கொற்றவர் = வெற்றியை யுடையவர் ; அரசர்

80-ம் பக்கம்.

பழம் பிறப்பு = முற்பிறப்பு
புத்திரப் பேறு = பிள்ளைகளாகிய செல்வம்
மதி வல்லோய் = அறிவில் வல்லவனே
நல் வினை = புண்ணியம்

81-ம் பக்கம்

புதல்வி = மகள்

83-ம் பக்கம்

கைம்மை = விதவைத் தன்மை

84-ம் பக்கம்

இயற்றினோர் = செய்தோர்
போதி = அரசமரம், ஞானமுடையது
போதம் = ஞானம

85-ம் பக்கம்

இன்மை = இல்லாமை

87-ம் பக்கம்

தூய குணம் = பரிசுத்தமான குணம்

'மனைத்திற வாழ்க்கை' யென்னுஞ் செய்யுள்:—

மனைத்திற வாழ்க்கை = இல்லற வாழ்வு
மாயம் = பொய்
தினைத்தனை = தினையளவு
மலையா அறம் = மாறுபாடில்லாத துறவறம்

88-ம் பக்கம்

பணியாளர் = வேலைக்காரர்

90-ம் பக்கம்

பொலிவு உறும் = விளங்கும்
'மொய்த்த மூவறு' என்னுஞ் செய்யுள் :—

மொய்த்த = நெருங்கிய
மூவறு டைடை = பதினெட்டுப் பாஷை
பேறுமாக்கள் = திக்கில்லாதவர்
படிவ நோன்பியர் = தவவேடமும் நோன்பு முடையவர்
மடி நல்கூர்ந்த = ஆடையின்றி வறுமையடைந்த;
மடி = சோம்பலெனினுமாம்

92-ம் பக்கம்

வழிபட்டாள் = வணங்கினாள்

முற்றிற்று.

P. R. RAMA IYAR AND CO., PRINTERS MADRAS

